# கல்கி

KALKI 5.11.89 ரூ. 2.50



## செக்ஸ் உணர்வுகளைக் கட்டுப்படுத்துவது எப்படி?

# ஜலதோஷம் பறந்து போச்சு!

யூக்கலிப்டஸ்
அடங்கிய
அமிர்தாஞ்சன்
கோல்ட் ரப்
குழந்தைகளின்
மென்மையான
சருமத்திற்கு மிகவும்
இதமானது...
அன்னையின்
அன்பான
அரவணைப்பைப்
போல...

புதிய
15 கிராம்




அமிர்தாஞ்சன்

## கோல்ட் ரப்

ஜலதோஷத்திலிருந்து துரித நிவாரணம்

HTA 7351

# தேர்தல் ஜிம்னாஸ்டிக்ஸ்!




''எதிர்க்கட்சிகளிடையே இந்தப் பக்கம் தொகுதி உடன்பாடு காணலாம்னு பார்த்தா, அந்தப் பக்கம் மூணாவது அணின்னு சொல்லிக்கிட்டு, சுப்பிரமணிய சுவாமி, எல்லாத் தொகுதிகளிலேயும் பழைய ஜனதாக் கட்சி ஆளுங்களை நிறுத்தி, வோட்டுக்களைப் பிரிப்பேன்றாரே!''



''இந்தப் பக்கம் ஏ.பி. வெங்கடேசவரன்; அந்தப் பக்கம் ஜெனரல் சின்ஹா; மூணாவது பக்கம் மதுமேத்தான்னு சுயேச்சையாப் போட்டியிட்டாலும் மூணு பேருமே எதிர்க்கட்சிங்க பக்கம்தான்!''



''இப்படி நின்னு பார்த்தாக்கூட வைஜயந்தி மாலாவுக்கு ஸீட் கிடைக்காதுன்னு பேசிக்கிறாங்களே!''



''தேசிய முன்னணியோ, கூட்டணியோ, காங்கிரஸ் ரெண்டிலே ஒண்ணு இப்படித்தான் சதக்குன்னு விழப் போகுது!''

புகைப்படங்கள்: வெங்கடரமணன்.

# சென்ட் மணமும்



* மணக்கும் தொழிலகம்.

பஸ்ஸை விட்டு இறங்கியது முதல், கண்ணில் பட்ட அனைவரிடமும் கேட்டுப் பார்த்து விட்டேன். ஆனால் ஒருத்தர் கூட சரியான விளக்கம் தரவில்லை. கேள்வியோ ரொம்ப சிம்பிள். மேட்டுப்பாளையம் என்று எப்படிப் பெயர் வந்தது?

''சார்! எங்க ஊரைப் பார்த்தீங்கல்ல? எத்தனை மேடு, பள்ளமா இருக்குது! அதான் 'மேட்டுப் பள்ளம்'னு இருந்து, பாளையம்னு மாறிடுச்சி!'' என்று சொன்னவரின் நகைச்சுவையுணர்வைப் பாராட்டத் தோன்றியதேயொழிய, விளக்கத்தை ஏற்க முடியவில்லை. சரியான விளக்கம் தெரிந்தவர்களுக்கு, கட்டுரையின் கடைசியில் ஒரு சுவாரசியம் இருக்கிறது.

## உருளைக்கிழங்கும் இடுப்புப் பிடிப்பும்!

உருளைக்கிழங்கு மொத்த வியாபாரம் மேட்டுப்பாளையத்தின் பிரதான பிசினஸ். மெயின் ரோட்டிலிருந்து, இடப்பக்கம் திரும்பி நடந்தால், நெடுக உ. கி. மண்டிகள்தான். ஆண்களும், பெண்களும் உட்கார்ந்து உருளைக்கிழங்கு மலைகளைத் தகர்த்து சைஸ் வாரியாய்ப் பிரித்துக் கொண்டிருப்பார்கள். உருளைக்கிழங்கு சாப்பிடாமலேயே இடுப்புப் பிடிப்பு வந்துவிடும் அவர்களுக்கு! நீலகிரி மலையில் விளையும் அத்தனை கிழங்குகளும் இங்கே வந்து குவிகின்றன. பல ஊர்களிலிருந்தும் வியாபாரிகள் வந்து ஏலம் கேட்டு, சரக்கு வாங்கிக் கொண்டு போகிறார்கள். 69 வயதான மாத்தையா உ. கி. வியாபாரிகள் சங்கத் தலைவர். ''ஃபிப்டி இயர்ஸ் இன் பொடேடோ பிசினஸ். லாங் டைம் அகோ, பாம்பே, கல்கத்தா, பூனா, கேரளா பிசினஸ் மென் கமிங் டு மேட்டுப்பாளையம்...''

''பரவாயில்லை. தமிழிலேயே சொல்லுங்க.''

''விஞ்ஞான முறைகளால் உருளைக்கிழங்கு சாகுபடி பல மடங்கு உயர்ந்து விட்டாலும், ஊட்டி கிழங்கிற்கு அந்தக் காலத்திலிருந்த மாதிரி இன்றைக்குக் கிராக்கி இல்லை. காரணம், பெங்களூரிலும் உருளைக்கிழங்கு நன்கு விளைகிறது.''

நூறு கோடி ரூபாய் புரளும் இந்த பிசினஸில் விவசாயிகளின் ஒரே பிரச்னை—

* கோவையை விடக் கொஞ்சம் சுத்தம்.





* உ. கி. சாப்பிடாமலே இடுப்புப் பிடிப்பு!

# வைரத்தின் ஜொலிப்பும்



* ஜொலிக்கும் வைரங்கள்.

தரமான விதை, தேவையான அளவுக்கு சப்ளை ஆவதில்லை என்பதுதான்.

மழையின் பலனான மேட்டுப்பாளையச் சகதியில், குயிலிபோல லேசாய் டான்ஸ் ஆடியபடி விழாமல் நடந்து விட்டோமானால், நீலகிரி கூட்டுறவு விற்பனை மையத்துக்குப் போய்விடலாம். அங்கேதான், கோஸ், கேரட், பீட்ரூட், முள்ளங்கி என உ. கி. தவிர மற்ற காய்கறிகளை விவசாயிகள் விற்பனைக்குக் கொண்டு வருகிறார்கள். ஒவ்வொரு காய்க்கும் தனித்தனி ஹால். ஜே ஜே என்று வியாபாரக் கும்பல். காச்மூச்சென்று ஏலம் கேட்கும் சப்தம். நீலகிரியில் விளையும் காய்கறிகளின் விற்பனையில் அறுபது சதவீதம் இந்த நிறுவனம் மூலமாய்த்தான் நடைபெறுகிறது. சும்மா ஒரு ரவுண்டு அடித்து, ஆங்காங்கே ரெண்டு கேரட், பீட்ரூட் என்று கடித்துக் கொண்டே போனால் (கோஸ் கூட முயன்று பார்க்கலாம்) வயிறு 'திம்'மென்று ஆகிவிடும். வெள்ளைப்பூண்டு, இஞ்சிக்கென்று தனி மண்டிகள். (பூண்டுக்கு சேல்ஸ் டாக்ஸ் உண்டாம்!)

## திருப்பூருக்குத் தண்ணீர்!

"கடந்த சில வருடங்களில் மேட்டுப்பாளையம் ரொம்ப பிசியான ஊராகி விட்டது. தேவையான அளவுக்கு ரோடுகளை அகலப்படுத்தவில்லை. விபத்துக்களும் அதிகரித்து விட்டன" என்றார் ஒரு வியாபாரி. "வழக்கமாய் எல்லா ஊர்களிலும் பஸ் ஸ்டாண்ட் பிரச்னையாய் இருக்குமே உங்கள் ஊரில் எப்படி?" என்று கேட்டதுமே, "இங்கே, அந்தப் பிரச்னை இருந்தது. ஆனால், புது பஸ் ஸ்டாண்டு சில ஆண்டுகளாய் இயங்கி வருவதால், இப்போது இல்லை" என்றார். பஸ் ஸ்டாண்டில் ஒரு ரவுண்டு அடித்தபோது, கோயமுத்தூர் பஸ் ஸ்டாண்டைவிடக் கொஞ்சம் சுத்தமாய் இருந்ததைப் பார்க்க முடிந்தது.

மேட்டுப்பாளையத்தில், மனத்துக்கு இதமான இன்னும் ஒரு விஷயம், தண்ணீர். 'தண்ணி'யைப் போலவே, தண்ணீருக்கும் பஞ்சமில்லை. திருப்பூருக்குக் கூட, தண்ணீர், மேட்டுப்பாளையத்திலிருந்துதான் போகிறது.

## இரும்புப் பாளையம்!

குறிப்பிட்ட ஒரு பகுதிக்கு வந்தால், மேட்டுப்பாளையமா? இரும்புப் பாளையமா என்று சந்தேகமே வந்துவிடும். ஆமாம்! அந்த அளவுக்கு அங்கே இரும்பு வியாபாரம் நடக்கிறது. சுமார் நூறு வியாபாரிகள் போல இருக்கிறார்கள். தமிழகத்தின் பல பகுதிகளுக்கும் போய், பழசாகி, இனி தேறாது என்று ஒதுக்கப்பட்ட 'காயலான் கடை' பஸ், வேன், லாரிகளை வாங்கி வந்து அக்கு அக்காய்ப் பிரித்து, உருப்படியான உதிரிப் பாகங்களை மறுபடி விற்பனை செய்கிறார்கள். உபயோகமற்றவற்றை, உருக்கி எடுக்க 'ஸ்கிராப்'புக்குப் போட்டு விடுகிறார்கள். நல்ல 'துருதுருப்பான' பிசினஸ். "உனக்கு என்னா சார் வேணும்? எந்த ஸ்பேர் ஐட்டம்னாலும் நேராக் கிளம்பி மேட்டுப்பாளையம் வரலாம் சார் நீ!" என்றார் ஓர் இரும்பு வியாபாரி. அவர் சொன்ன கணக்கு: ஒருநாளைக்கு ஒரு கடையில் எப்படியும் நானூறு ரூபாய்க்கு வியாபாரம் நடக்கும். சுமார் நூறு கடைகள் இருக்கின்றன. "தினத்துக்கு நாற்பதாயிரம். மாதத்துக்கு, வருஷத்துக்கு நீயே கணக்குப் போட்டுக்க!" இந்த மாதிரி கஷ்டமான கணக்குப் போடச் சொல்லி மிரட்டவே,

* இரும்புப் பாளையமோ...?





# என்ன இது...?

கோழி கிறுக்கல் என்பார்களே அதுவா?
மாடர்ன் ஆர்ட்டா?
இரண்டு வயதுக் குழந்தை படம் போட்டிருக்கிறதா?

6 ஆம் பக்கம் பார்க்கவும்.

"அப்ப, பார்க்கலாமுங்க!" என்று கழற்றிக் கொண்டு நடந்தேன்.

## செண்ட் மணமும் வைர ஜொலிப்பும்!

செண்ட் தொழிலகமும் செயற்கை வைரக்கல் தொழிலகமும் மேட்டுப்பாளையத்தில் இயங்கி வரும் இரண்டு முக்கிய தொழிற்சாலைகள். என்ஸ் ஆரோமேடிக்ஸ் மல்லிகை, ரோஜா, சம்பங்கி மலர்களிலிருந்து செண்ட் தயாரிக்கிறது. தொழிற்சாலையில் நூறு பேர் கூட வேலை செய்யவில்லை என்றாலும், மேட்டுப்பாளையத்தைச் சுற்றியுள்ள சுமார் மூவாயிரம் ஏக்கரில் இந்த மலர்களைச் சாகுபடி செய்வதன் மூலமும், பறித்துத் தொழிற்சாலைக்கு அனுப்புவதன் மூலமாகவும் பல்லாயிரக்கணக்கானவர்களுக்கு வேலை வாய்ப்பு. இங்கு தயாரிக்கப்படும் செண்ட் வகையறாவுக்கு ஃபிரான்ஸிலும், வேறு சில அயல்நாடுகளிலும் ஏகப்பட்ட மவுசு!

சுவிஸ் கூட்டுறவில் தொடங்கப்பட்ட செயற்கை வைரத் தொழிற்சாலை, என். மகாலிங்கத்தின் சக்தி குரூப் நிறுவனங்களில் ஒன்று. அமோனியம் சல்பேட், அலுமினியம் ஹைடிரேட், கந்தக அமிலம் இவற்றைக் கொண்டு தயாரிக்கப்படும் ஜிலுஜிலு சமாசாரம்தான் செயற்கை வைரம். தென் கிழக்கு ஆசியாவிலேயே இதுபோன்று வேறு ஒரு தொழிற்சாலை கிடையாது. அயல் நாடுகளில் இக்கற்களுக்கு நல்ல கிராக்கி. நம் நாட்டிலும், ஜெய்ப்பூரில் நல்ல டிமாண்ட். இங்கே தயாரிக்கப்பட்ட கற்களை, வெட்டி, பட்டை தீட்டி, ஆபரணங்களில் பதிப்பது தவிர, எலக்டிரிகல், எலெக்டிரானிக்ஸ் துறைகளிலும் பயன்படுத்துகிறார்கள். கிராமபோன் ஊசிகள் கூட இதிலிருந்து செய்யப்படுவதுதானாம்.

இங்கே கல்லூரி ஏதும் இல்லையென்றாலும், ஒரு பாலிடெக்னிக் இருக்கிறது. நஞ்சையா லிங்கம்மாள் பாலிடெக்னிக்குக்குச் சுமார் பதினெட்டு ஏக்கர் நிலத்தை நன்கொடையாய் வழங்கியிருக்கிறார்கள் செண்ட் ஃபாக்டரிக்காரர்கள். எப்படியும் ஒரு கல்லூரியைத் தொடங்கி விடுவது என்பதில் ஆர்வம் காட்டுகிறார்கள் மேட்டுப்பாளையம் ஊர்க்காரர்கள்.

மேட்டுப்பாளையம் கிளப்பில் டென்னிஸ், ஷட்டில் எல்லாம் ஆட வசதியுண்டு. இரண்டு முறை மாநில அளவிலும், மாவட்ட அளவிலும் டோர்னமெண்ட்டுகள் கூட நடத்தியுள்ளது. இதன் இன்னொரு விசேஷம், நீச்சல் குளம். அதையும் சுத்தமாய்ப் பராமரிப்பது! மற்ற பல ஊர்களைப் போல் மேட்டுப்பாளையத்திலும் ரோட்டரி, லயன்ஸ் மற்றும் ஜேஸீஸ் போன்ற சமூக சேவை அமைப்புகள் இயங்கி வருகின்றன; பல்வேறு சமூக சேவைகள் செய்கின்றன.

தமிழக அரசோ, மத்திய அரசோ, கொள்கை அறிவிப்பு, வரிவிகித மாற்றம், சலுகை அறிவிப்பு என்று என்ன செய்தாலும், மேட்டுப்பாளையம் வியாபாரிகளுக்கு உடனடியாய் விளக்கமான சுற்றறிக்கை கைக்கு வந்து சேர்ந்துவிடும். இந்த உபயோகமான பணியை மேட்டுப்பாளையம் சேம்பர் ஆஃப் காமர்ஸ் செய்து வருவதைக் குறிப்பிட்டார் அதன் செயலாளரான சித்துராம் பாபு. "மேட்டுப்பாளையம் முதல் கிரேடு முனிசிபாலிடி. மக்கள் தொகையின் அடிப்படையில் இல்லாமல், வரி வசூல் வருமானத்தின் பேரில்தான் இந்த அந்தஸ்து கிடைத்துள்ளது" என்றார்.

## மர்ம மரணம்!

பஷீர் என்ற இளைஞரது மர்மமான மரணம் மேட்டுப்பாளையத்தில் ஏற்படுத்திய பரபரப்பு இன்னும் ஓய்ந்த பாடில்லை. அவர் பிசினஸ் பண்ணிக் கொண்டிருந்தார் என்று ஒரு சாராரும், நிழலான காரியங்களில் ஈடுபட்டிருந்தார் என இன்னும் சிலரும்



* ரவிச்சந்திரன்: சாதனைப் பட்டியல்...




## உங்கள் சேமிப்பு ஒரே சமயத்தில் 2 இடங்களில் இருக்க முடியும்!



உங்களிடம்—உங்களுக்கு பணம் தேவைப்படும் போதெல்லாம்



KVBயிடம் —எப்பொழுதும் வட்டி பெற்றுக் கொண்டு

# விஷ்ராந்தி டிபாஸிட் திட்டம்

கரூர் வைஸ்யா வங்கியின் விஷ்ராந்தி டிபாஸிட் திட்டம், உங்கள் முதலீட்டிற்கு வங்கியின் பாதுகாப்புடன் உயர் விகித வட்டி வழங்குகிறது; அதேசமயம், அதனை "பணமாக மாற்றும்" வசதியையும் வைத்திருக்கிறது. அதாவது, விஷ்ராந்தி என்ற பெயருக்கேற்ப தேவைப்படும் போது உங்கள் பணத்தை பெற்றிடலாம் என்ற மனநிம்மதியுடன் நீங்கள் முதலீடு செய்யலாம்.

**உயர் வட்டி விகிதம்**

சாதாரணவொரு சேமிப்பு கணக்கு போலில்லாது, விஷ்ராந்தி டிபாஸிட் திட்டத்தின் கீழ் உங்களது முதலீட்டிற்கு ஆண்டுக்கு 10% வட்டி கிடைக்கிறது

**"பணமாக மாற்றுதல்" எளிது**

எப்போது உங்களுக்கு பணம் தேவைப்படுகிறதோ அப்போது டிபாஸிட் தொகையில் 75% வரை திரும்பியெடுக்கலாம்! அதுவும், இவ்வாறு திரும்பப் பெற்ற தொகைக்கு மூன்று மாதங்களுக்கு ஒருமுறை, டிபாஸிட் வட்டி விகிதத்திற்கு மேலாக கூடுதல் 2% வட்டி செலுத்தினால் போதும்.

**எளிதான, சிக்கல்கள் இல்லாத திட்டம்**

டிபாஸிட் செய்யும்போதும் சரி, அதிலிருந்து பணம் திரும்பப் பெறும்போதும் சரி, நேரத்தை விழுங்கும் தொல்லைகள் எதுவுமில்லை. இப்போது முதலீடு செய்து, உங்கள் காசோலை (செக்) புத்தகத்தை பெற்றுக் கொள்ளுங்கள்—அதன்மூலம் தேவைப்படும்போது உங்கள் பணத்தை திரும்பப்பெறலாம்!

*இம்மாதிரி ஒரு திட்டத்தையல்லவா நீங்கள் எதிர்பார்த்திருந்தீர்கள்?*

வாருங்கள், மேல் விவரங்களை எங்களை அணுகிப் பெறுங்கள்.




## கரூர் வைஸ்யா பாங்க்

கரூர் - 639 002.

பவள விழா ஆண்டு நோக்கி வெற்றி நடை...

B.பாஸ்கரன்

Anugrah 382/89 Tam



* பாபு: சேம்பர் ஆஃப் காமர்ஸின் உபயோகமான பணி....

சொல்கிறார்கள். அவரைப் போலீஸ் கைது செய்ததா? போலீஸ் ஸ்டேஷனில் வைத்துக் கடுமையாய் அடிக்கப்பட்டாரா?' என்று கேட்டால் ஆமாம் போட்டு ஆமோதிக்கிறார்கள்; ஆனால் "அவர் போலீஸ் லாக் அப்பில்தான் செத்துப் போனாரா?" என்றால், "நமக்கென்ன சார் தெரியும்? எதுக்கு வீண் வம்பு?" என்று நழுவுகிறார்கள். போலீஸ் தரப்பிலோ, அதுபற்றி விசாரணை நடப்பதால் நோ கமெண்ட்" என்கிறார்கள்.

உபயோகமாய்ப் பணியாற்றும் இன்னோர் அமைப்பு கன்ஸ்யூமர் பாதுகாப்புக் கவுன்சிலின் மேட்டுப்பாளையம் கிளை. இதன் செயலாளர் ரவியை, அவரது அலுவலகத்தில் சந்தித்தோம். அவர் நீண்ட சாதனைப் பட்டியலையே நீட்டினார். சாம்பிளுக்குச் சில: மேட்டுப்பாளையம் – கோவை பஸ் சார்ஜைக் குறைத்தது; ஞாயிற்றுக் கிழமைகளில், ஓட்டாமல் நிறுத்தப்பட்ட கோவை – மே. பாளையம் பாசஞ்சர் ரயிலை ஓடச் செய்தது. சினிமா தியேட்டர் கிச்சேஷன் தில்லுமுல்லுகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தது; பஸ் ஸ்டாண்டில், வண்டிகள் நிறுத்தவும், கழிப்பிடங்களைப் பயன்படுத்தவும் நிர்ணயிக்கப்பட்ட கட்டணத்துக்கு அதிகமான வசூலை நிறுத்தியது. ஆபாச போஸ்டர்களைத் தடை செய்தது. கோர்ட் ஸ்டாம்ப்புகளை அதிக விலைக்கு விற்பனை செய்வதைத் தடுத்தது. ரேஷன் கடை தில்லுமுல்லுகளைக் கண்டுபிடிக்க, கண்காணிப்புக் கமிட்டி அமைத்தது...."

## ஸ்பெஷல் பெருமை

மற்ற ஊர் ரயில் நிலையங்களுக்கு இல்லாத ஸ்பெஷல் பெருமை மேட்டுப்பாளையத்துக்கு உண்டு. ஆம், மேட்டுப்பாளையத்திலிருந்து, ஊட்டிக்குப் போய் வரும், மலைப்பாதை மினி ரயில்தான் அது. தண்டவாளங்கள் தவிர, நடுவே பற்கள் கொண்டதொரு தண்டவாளமும் உண்டு. கம்பார்ட்மெண்ட்கள் ஐந்து. ரயிலில் பெட்டிகள் முன்னாலிருக்க, இஞ்சின் கடைசியில் இணைக்கப்பட்டு, ரயிலை மேல் நோக்கித் தள்ளிக் கொண்டு ஏறும். இறங்கும் போது, சாதாரண ரயில் போல, முதலில் இஞ்சின் தொடர்ந்து பெட்டிகள். கட்டணம்: முதல் வகுப்பு ரூ. 65. இரண்டாம் வகுப்பு ரூ. 10. சுமார் நாலரை மணி நேர இந்த ரயில் பயணம் ஆயுசுக்கும் மறக்காது. நூறு ஆண்டுகளுக்கும் மேலாக இந்த ரயில் பாதை உள்ளது. முன்பெல்லாம் ஐந்து ரயில்கள் இருந்தனவாம். இப்போது ஒண்ணே ஒண்ணு. ஊட்டி சீசனில் இந்த ரயிலில் கூட்டம் தெரியும்.

மேட்டுப்பாளையத்தில் தடுக்கி விழுந்தால், தலைமாட்டில் ஒரு டாக்டர் கிளினிக் இருக்கும். கால்மாட்டில் இன்னொரு கிளினிக்! அந்த அளவுக்கு, மருத்துவ மகாஜனங்கள் நிறைந்திருக்கிறார்கள்! வியப்பு என்னவெனில், எல்லாக் கிளினிக்குகளிலும் நோயாளிகள் கும்பல்! "மேட்டுப்பாளையம் அரசு மருத்துவமனையில் ஒரு டஜன் டாக்டர்கள்தான். ஆனால் ஊரிலே முக்கால் செஞ்சுரி தாண்டியாகிவிட்டது!" என்றார் ஒரு மெடிகல் ஷாப் காரர். இத்தனை டாக்டர்கள் இருப்பதன் மர்மம் என்ன?

இந்த மர்மத்தையும் விளக்கி, ஊரின் பெயர் காரணத்தையும் கண்டுபிடித்துத் தபால் கார்டில் மட்டுமே "மேட்டுப்பாளையம் மர்மம்" என்று தலைப்பிட்டு எழுதும் மேட்டுப்பாளையம் மன்னர்களுக்கு (வாசிகளுக்கு) ரூ. 50 பரிசு பகிர்ந்து அளிக்கப்படும்! முடிவு தேதி: நவம்பர், 10.

— ஜூலி

படங்கள்: ஸ்ரீஹரி

4 ஆம் பக்க புதிருக்கு விடை: "நான் பிரதமராக வந்தால்..." என்ற தலைப்பில் இல்லஸ்டிரேட்டட் வீக்லிக்கு பேட்டி தந்திருக்கிறார் ரஜனீஷ். அவருடைய கையெழுத்துதான் அது!

— சேலம் சக்திக்கொடி.



நூல் அரங்கம்:

# கருத்தரங்கிடமிருந்து காப்பாற்றுங்கள்




நமது நாட்டில் சிறந்த நிர்வாகிகள் இருக்கிறார்கள். தகுதி உள்ளவர்களுக்குப் பஞ்சமில்லை. அவர்கள் இருந்தென்ன? தங்கள் திறமையை வெளிப்படுத்த வேண்டிய கட்டாயமோ, சந்தர்ப்பமோ அவர்களுக்கு அளிக்கப்படுவது இல்லை. இதனால், சிறந்த நிர்வாகிகளும் கூடக் காலக்கிரமத்தில் சோர்வுற்று ஒரு வரையறைக்குள் அகப்பட்டுச் செக்கு மாடு போலாகி விடுகிறார்கள். ஓர் இயந்திரம் மழுங்கிப் போவதை விட மனித ஆற்றல் மழுங்கிப் போவது தேசத்துக்கு மிகப் பெரிய நஷ்டமாகும்.

** நம் நாட்டில் பொருள்களை இரண்டு தரமாகத் தயாரிக்கிறார்கள். ஒன்று உள்நாட்டு உபயோகத்துக்கு, மற்றொன்று ஏற்றுமதிக்காக. வெளிநாட்டிலுள்ள நுகர்வோர் விழிப்புள்ளவர்கள். தரமில்லாதவற்றை வாங்க மறுத்து விடுகிறார்கள். ஆகவே, தரமான பண்டங்கள் வெளிநாடு செல்கின்றன. ஆனால் நம் நாட்டில் உள்ளவர்கள் எதிர்ப்பின்றி எதையும் வாங்கிக் கொள்கிறார்கள். ஆகவே தரமில்லாதவை உள்நாட்டில் விநியோகமாகின்றன. இது உற்பத்தியாளர்களின் எந்த வகையான தேச பக்தி என்பது விளங்கவில்லை. தரக்குறைவான சரக்கைத் தயாரிப்பதே பாவம் என்ற குற்ற உணர்வு உற்பத்தியாளர்களிடையே நிலவ வேண்டும். தரக்குறைவான உற்பத்தியில் பங்கு பெறத் தொழிலாளர்கள் மறுக்க வேண்டும்.

** ஒரு சமயம் ஒரு விமானம் கடத்தப்பட்டது. விமானத்திலுள்ள பயணிகள் அனைவரையும் சுட்டுக் கொல்லப் போவதாகக் கடத்தல்காரர்கள் அறிவித்தனர். மரணத்துக்கு முன் அவரவர் தம் கடைசி விருப்பத்தைச் சொன்னால் முடிந்தவரை அதை நிறைவேற்றித் தருவதாக வாக்களித்தனர்.

ஓர் இந்தியர், "உற்பத்திப் பெருக்கம் பற்றி ஒரு கருத்தரங்கு நடத்த ஆசைப்படுகிறேன். அதை இப்போதே, இங்கேயே துவக்கிவிட விரும்புகிறேன். இங்குள்ள பயணிகளையே கருத்தரங்கில் பங்குபெறச் செய்யலாம்" என்று வேண்டினார்.

உடனே ஓர் அமெரிக்கர், "அந்த மனிதர் கருத்தரங்கைத் தொடங்கிச் சித்திரவதை செய்யுமுன் தயவு செய்து என்னைச் சுட்டுக் கொன்று விடுங்கள். அதுதான் என் கடைசி விருப்பம்!" என்றார்.

நம்நாட்டில்கருத்தரங்குகளுக்குப்பஞ்சமே யில்லை. பேச்சளவுக்குச் செயல் திறனுக்குத்தான் பஞ்சம்!

** மனச்சாட்சியுள்ள ஒரு நல்ல தொழிலாளி தமது வேலையை ஒருவர் கண்காணிப்பதை விரும்ப மாட்டார். சதாகாலமும் மேலாளர் ஒருவர் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாலன்றித் தொழிலாளர்கள் வேலை செய்ய மாட்டார்கள் என்று நீங்கள் நினைத்தால் அது தவறான கணிப்பு. அவநம்பிக்கையும் சந்தேகமும் என்றுமே நல்ல பலனைத் தராது. உங்கள் தொழிலாளரிடம் தவறு செய்ய வெட்கப்படும் புதிய பண்பாட்டை உருவாக்குங்கள். இதற்கு ஒரே வழி சரியான கல்வியே. சிந்திக்கும் ஆற்றலை வளர்ப்பதுதான் கல்வி. எனவே சரியானபடி சிந்திக்கக் கற்றுத்தர வேண்டும்.

தொகுப்பு: **யெஸ்பால்**

இவருக்காக — ஆசிரியர் ஜி. இராமானுஜம், வெளியீடு, வானதி பதிப்பகம், சென்னை — 17, விலை ரூ. 20/-.



# செக்ஸ் உணர்வுகளைக் கட்டுப்படுத்துவது எப்படி?

"அன்புள்ள ஆசிரியருக்கு,

இத்துடன் ஒரு செக்ஸ் கட்டுரை இணைத்திருக்கிறோம். செக்ஸ் கட்டுரைதான் என்றாலும் உங்கள் பத்திரிகையின் தரத்தையும் மனத்தில் கொண்டு ஆபாசக் கலப்பின்றி இந்தக் கட்டுரை எழுதப்பட்டுள்ளது. இதே போல் வாரா வாரம் ஒரு கட்டுரை அனுப்பி வைக்கிறோம். இதற்குத் தாங்கள் தர வேண்டிய சன்மானம் ரூ. 150 மட்டுமே. தங்கள் ஆதரவை நாடுகிறோம்."

இப்படி ஒரு கடிதமும் அத்துடன் இணைந்ததாக ஒரு கட்டுரையும் கல்கி காரியாலயத்துக்கு பம்பாய் நிறுவனம் ஒன்றிலிருந்து வந்திருக்கிறது. இதே போல் எல்லா பத்திரிகைகளுக்கும் அனுப்பி வைத்திருக்கிறார்கள். கட்டுரை செக்ஸ் பற்றியது மட்டுமல்ல; நோயுற்ற மனத்தின் வக்ர உணர்வுகளைப் பற்றியது!

இவர்களைக் குறை சொல்லிப் பயனில்லை. இந்தியப் பத்திரிகை உலகமே இப்படித்தான் ஆகி விட்டது. "படுக்கையறை வேஷங்கள்" என்று தலைப்பிடுகிறது ஒரு பத்திரிகை! "இளைஞர்களுக்கான கிளுகிளு கதைகள்" என்று போஸ்டர் ஒட்டுகிறது மற்றொரு வார இதழ். 'ஏ' ஜோக்குகள்; சினிமா கவர்ச்சிப் படங்களுக்குக் கணக்கு வழக்கில்லை. 'மனைவிமார்கள் ஏன் சோரம் போகிறார்கள்' என்று கவர் ஸ்டோரி எழுதுகிறது ஒரு மாதமிருமுறை பத்திரிகை! இதில் வெட்கக்கேடு என்னவென்றால், இந்தப் பத்திரிகையின் ஆங்கிலப் பதிப்பு ஒரு தேசிய முக்கியத்துவம் வாய்ந்த பிரச்னையை கவர் ஸ்டோரியாக்குகிறது. அதே தேதியிட்ட தமிழ்ப் பத்திரிகை, தமிழனுக்காக ஸ்பெஷலாக, சோரம் போகும் மனைவிமார்களை அலசி ஆராய்வதை கவர்ஸ்டோரியாக்குகிறது!

"செக்ஸைப் பற்றி பேசாமலிருப்பதும் மூடி மறைப்பதும் ஹிப்பாக்ரஸி" என்ற அற்புதமான கருத்தை வெளியிட்டார் ஒரு வாரப் பத்திரிகை ஆசிரியர்! ஆனால் உண்மை என்ன? வேறு பல அம்சங்களில் போல் செக்ஸைப் பொறுத்தவரையிலும் கூட அடக்கம் பயில்வது என்பது கடந்த பல ஆண்டுகளில் நாம் வளர்த்துக் கொண்ட பண்பாடு. அந்தப் பண்பாட்டினை உருக்குலைப்பது மட்டுமின்றி, 'செக்ஸைப் பற்றி கௌரவமாகப் பேசுகிறேன்' என்று கூறிக் கொண்டு மக்களின் பலவீனத்தைப் பயன்படுத்தி காசாக்குகிற இந்தப் போக்குத்தான் ஹிப்பாக்ரஸி. இதில் மருத்துவ ரீதியான அணுகுமுறை, 'டாக்டர் பதிலளிக்கிறார்' என்ற ஏமாற்று வேலை வேறு!



செக்ஸ் என்பது இறைவன் அல்லது இயற்கை மனிதனுக்குக் கொடுத்துள்ள ஓர் உணர்வு. இதனை வரப்பிரசாதமாகவும் கருதலாம்; பலவீனமாகவும் எண்ணலாம். இது இல்லையானால் மக்கட்பேறு இல்லை; மனித சமுதாயமே இல்லை. எனவே இது வரப்பிரசாதம். அடக்கத்துடன் இந்த உணர்வைக் கையாளாத போது அதுவே பலவீனமாகி விடுகிறது. இந்த பலவீனத்தை (S)ex-ploit செய்து பணம் பண்ணுகிறவர்களை என்னவென்று சொல்வது?

இந்த பலவீனம் நோய்களை உருவாக்கும் என்பதுடன் வேறு பல பலவீனங்களுக்கும் நம்மை அழைத்துப் போகும் என்பதுதான் பெரும் துயரமான விஷயம். உடல் பலவீனத்துக்குக் காரணம் மனத்தின் பலவீனமே! மனம் உறுதியாக இருந்தால் உடலைக் கட்டுப்படுத்தலாம். மது, சிகரெட் பழக்கம் லஞ்ச ஊழல் முதலிய பல பலவீனங்கள் மனத்தைக் கட்டுப்படுத்த முடியாததால் தான் உருவாகின்றன.

ஆக, ஒரு நாடும் அதன் மக்களும் சிறந்து விளங்க, அம் மக்கள் மனத்தை நன்கு ஆளத் தெரிந்து, அதற்குச் சரியான முறையில் வழி காட்டிச் செல்ல வேண்டும். தனி மனிதர்களின் பலவீனம் ஒரு நாட்டின் பலவீனமே!

பாற்கடலைக் கடைந்த போது அமுதமும் வந்தது. விஷமும் வந்தது. அது போல் ஜனநாயகத்திலும் நல்லது கெட்டது இரண்டும் உண்டு. ஜனநாயக நாட்டில் பத்திரிகைகளைக் கட்டுப்படுத்த முடியாது. சென்ஸார் செய்ய இயலாது. ஆபாச சினிமாக்கள், புளூ பிலிம் வீடியோ டேப்புக்கள், படுக்கை அறை உரையாடல்களைக் கொண்ட ஆடியோ டேப்புகள் முதலியவற்றை அடியோடு ஒழித்துக் கட்டி விடவும் முடியாது. ஆனால் நம் மனத்தை நம்மால் கட்டுப்படுத்த முடியும்! இதை எப்படி சாதிப்பது?





• முத்துசாமி

**கிருஷ்ணமாச்சார்யா யோக மந்திரம் என்கிற யோகா பயிற்சி நிலையத்தின் பயிற்சியாளர் முத்துசாமி கூறுகிறார்:**

மனிதர்கள் ஏன் சிகரெட் பிடிக்கிறார்கள்? மது அருந்துகிறார்கள்? 'அதிலே இன்பமிருக்கிறது' என்று நினைப்பதால்தான்! ஆனால் என்னிடம் பயிற்சி பெற வந்த எத்தனை செயின் ஸ்மோக்கர்கள் சிகரெட் பிடிப்பதை அடியோடு நிறுத்தி விட்டார்கள் தெரியுமா? மொடாக் குடியர்கள் எத்தனை பேர் மதுவையே இப்போது தொடுவதில்லை தெரியுமா? இதற்கெல்லாம் என்ன காரணம்? யோகாசனப் பயிற்சி, தியானம் இவைதான். இவற்றால் உள்ளமும் உடலும் திடமாய் ஆகிறது. சுய நம்பிக்கை — தன்னம்பிக்கை ஏற்படுகிறது. மனோபலம் கூடுகிறது. மனம் மெய்யான சந்தோஷமடைகிறது. இதனால் மதுவும் சிகரெட்டும் போலியான சந்தோஷங்கள் என்பதை மனம் புரிந்து கொள்கிறது. அவற்றைத் துறப்பது எளிதாகிறது.

மனக்கட்டுப்பாட்டை படிப்படியாய்த் தான் அடைய முடியும். முதல் படி யோகாப்பியாசம். இதற்குப் பல புத்தகங்கள் வெளியாகி உள்ளன. இன்று டி.வி.யிலும் யோகா வகுப்பு நடக்கிறது. ஆனாலும், ஒரு குரு மூலமாய்ப் பெறுகிற பயிற்சிக்கு ஈடு வேறு எதுவுமில்லை. ஒரு புத்தகத்தைப் படித்துச் செய்தாலும், நாம் செய்யும் போது ஏற்படும் தவறு நமக்குத் தெரிய வாய்ப்பில்லாது போய் விடுகிறதல்லவா? குருவிடம் பயின்றபின் தாமாகச் செய்தால், உத்தமம். ஒவ்வொருவரும் அவரவர் உடல் அமைப்பு, வயது, உடல் உபாதைகள் இவைகளுக்கு ஏற்றபடி, செய்யத்தக்க யோகாப்பியாசங்களை மட்டுமே குருவிடம் கேட்டறிந்து செய்ய வேண்டும். இல்லையெனில் வேண்டாத பின்விளைவுகள் ஏற்பட வாய்ப்புண்டு. சரியான முறையில் செய்தால் தேக ஆரோக்கியம் நன்கு பராமரிக்கப்படும்.

அடுத்து, பிராணாயாமம். உள்மூச்சு, வெளிமூச்சு இவற்றைக் கட்டுப்படுத்துவது மூலமாய் மனத்தை ஒருமுனைப்படுத்தலாம் — இதை காயத்ரி மந்திரம் போன்றவற்றுடன் இணைத்துச் செய்யலாம்.

இந்தப் பயிற்சியை அடுத்ததுதான் தியானம். 'ஓம்' போன்ற மந்திரங்களை உச்சரித்தபடி, தியானம் செய்கிற போது, மனம் ஒரு நிலைப்படுகிறது. ஒருவர் சுமார் அரை மணி நேரம் தியானம் செய்கிறார் என்றால், அந்த அரை மணி நேரமும், அவர் வேறு எந்த சிந்தனையுமில்லாமல் மனத்தை ஒருமுனைப் படுத்தி அமர்ந்திருந்தார் என்று அர்த்தமில்லை. அரை மணி நேரமும் அந்த முயற்சியில் ஈடுபட்டிருந்தார் என்றே பொருள். அதிலே ஒரு சில நிமிடங்களே அவரால் மனத்தை ஒருமுகப்படுத்த முடிந்தது என்றாலும் போதுமானதே! காரணம், மனம் ஒரு குரங்கு! அது ஓரிடத்தில் நிலயாய் இருக்காது! அதனை அடக்குவது என்பது ஒரு முரட்டுக் குதிரையை வழிக்குக் கொண்டு வருவது போன்றதுதான்.

ஆனால் தினசரி ஒரு பத்து நிமிடமாவது ஒருவர் தியானம் செய்கிறார் என்றால், அவருக்கு நிச்சயம் எந்த ஒரு விஷயத்திலும் எதிர்மறை எண்ணமே (negative thinking) வராது. விரக்தி விலகும்! புத்தி கூர்மையாகும். எந்த ஒரு விஷயத்திலும் சட்டெனப் பிரச்னையை அலசி, உடனடியாய் முடிவெடுக்கிற திறமை அதிகரிக்கும்.

யோகா, தியானம் போன்ற விஷயங்களில் மனத்தை ஈடுபடுத்துவதால், மனசுக்கு உலக வாழ்க்கையின் மீது வெறுப்பு உண்டாகி துறவு மனப்பான்மை ஏற்பட்டு விடும் என்று சிலர் தவறாக எண்ணுகிறார்கள். அப்படி ஒருநாளும் நேராது. யோகாப்பியாசமும், தியானமும் ஆரோக்கியமான உடலையும் மனத்தையும் பெறுவதற்காகத்தான். இந்த யோகா பயிற்சி நிலைய நிறுவனரான கிருஷ்ணமாச்சார்யா நூறாண்டுகளுக்கு மேல் வாழ்ந்தவர். இல்லறத்தில் ஈடுபட்டவர்.பேரன் பேத்திகள் எல்லாம் இருக்கிறார்கள். யோகாவும், தியானமும் மனிதன் தீய செயல்களில்ஈடுபடாமல்காக்குமேயொழிய, சராசரி மனித வாழ்க்கையின் நியதிகளையும், சந்தோஷங்களையும் துளியும் பாதிக்காது.



**ராமகிருஷ்ண மடம், சுவாமி கமலாத்மானந்தா சொல்லுகிறார்:**

மனிதன் இன்பமாக வாழ வேண்டும்; ஆனால் அந்த இன்பம் அறத்திற்கு உட்பட்டதாக இருக்க வேண்டும்: தெய்வத்திடம் கொள்ளும் ஈடுபாடுதான் எல்லா ஒழுக்கங்களுக்கும் அடித்தளமாக, ஆணிவேறாக அமைகிறது. கிழக்கு நோக்கிச் செல்லச் செல்ல ஒருவன் மேற்கிலிருந்து விலகி விடுகிறான். அது போல இறைவனை நோக்கிச் சொல்லச் செல்ல, உள்ளத்திலுள்ள இழிந்த இயல்புகள் விலகி விடுகின்றன. ''கடவுளை நோக்கிச் செல்வதை ஒருவன் லட்சியமாகக் கொண்டால், அவன் உலகக் கடமைகளையும், ஆன்மீகக் கடமைகளையும் ஒழுங்காகச் செய்வான். சமுதாயத்திற்கு ஊறுவிளைவிப்பவனாக இருக்க மாட்டான்'' என்று ராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூறுகிறார்.

பாலில்புரை ஊற்றித் தனியாக வைத்தால் அது உறையும். பாலை போட்டுக் குலுக்கிக் கொண்டே இருந்தால் பால் உறையாது. மனமும் அது போலத்தான். தேவையற்ற சிந்தனைகள், வீண் பேச்சுக்கள், தேவையில்லாத செயல்கள் ஆகியவற்றில் ஈடுபடும் போது மனம் பாலைக் குலுக்குவது போல கலங்குகிறது. நல்ல பக்குவத்தைப் பெறுவதில்லை. ஜபத்திலும், தியானத்திலும், பிரார்த்தனையிலும் மனத்தை ஈடுபடுத்தினால் மனம் நம் கட்டுக்குள் வரும்.

கடவுளுக்கும் சாத்தானுக்கும் ஒரே பலம். ஒரே ஆற்றல். ஆனால் சாத்தானிடம் இல்லாதது புனிதத் தன்மை. ஆன்மீகத்தில் நம்பிக்கை கொள்ளாவிட்டால் சமுதாயத்தின் ஆற்றல் என்பது சாத்தானின் ஆற்றலாகப் போய் விடும். பத்திரிகை நடத்துபவர்கள், திரைப்படத் துறையினர், அரசியல்வாதிகள் முதலிய எல்லோரும் இதை நினைவில் வைக்க வேண்டும்.

பத்திரிகையாளர்களும் படாதிபதிகளும், ஏன் இப்படி ஆபாசத்தைப் புகுத்துகிறீர்கள் என்று கேட்டால்?' 'மக்கள் விரும்புகிறார்கள், அதனால் தருகிறோம்' என்று

* சுவாமி கமலாத்மானந்தா

# உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது; பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/FSL/5112/TAM

சொல்கிறார்கள். ஒரு தாய் குழந்தைக்கு உடம்புக்கு ஆகாது என்பதால் சில உணவுப் பொருட்களைத் தர மாட்டாள். குழந்தை அழுதாலும் கொடுக்க மாட்டாள். தாய் போல பத்திரிகை நடத்துபவர்கள், திரைப் படத் துறையினர் செயல்பட வேண்டும்.

அன்றாட வாழ்க்கையின் ஒரு பகுதியாக தியானம் செய்வது, ஜபம் செய்வது போன்றவற்றை வைத்துக் கொண்டால், மனத்தை ஒருமுகப்படுத்தி, நல்ல சிந்தனைகள், செயல்களில் ஈடுபட முடியும். வெளியுலகத்தில்தான் உண்மையான இன்பம் என்பது தவறு. உண்மையான ஆனந்தம் உள்ளத்தில்தான் இருக்கிறது. புனுகுப் பூனை, தன் உடலில் நறுமணம் இருப்பதை அறியாமல் வெளியே தேடுகிறது. மனிதனோ அவனது உள்ளத்தில் ஆனந்தம் இருப்பதை அறியாமல் வெளியே தேடிக் கொண்டிருக்கிறான். பாரதியார் நாத்திகர்களுக்குக் கூட தியானம் தேவை என்று ஓரிடத்தில் கூறுகிறார். இன்னொரு சமயம், ''தமிழா! உணவை மறந்தாலும் மறந்து விடு. ஆனால் தியானம் செய்வதை மறவாதே'' என்கிறார்.

'மனம் தியானத்தில் ஈடுபடவில்லை. அதனால் செய்ய முடியவில்லை என்று விட்டுவிட வேண்டாம். பிறந்த கன்று முதலில் எழுந்து நிற்கத் தடுமாறுகிறது; விழுகிறது. பின்னர், துள்ளி ஓடும் அளவுக்கு வந்து விடுகிறது. அது போலத்தான் தியானம். முதலில் மனம் தடுமாறும். தொடர்ந்து விடாமுயற்சியுடன் இறங்கினால் மனம் கட்டுப்படும்; தியானத்தின் ஆனந்தம் புரிய வரும்.

ஆறு கரைகளை உடைத்துக் கொண்டு போனால் ஊரை அழிக்கும். ஆனால் கரைகளுக்கு இடையில் ஓடும் போது பயனளிக்கிறது. அது போல் கட்டுப்பாட்டுக்கு அடங்கி மனம் இயங்கினால் நல்ல மனமாக விளங்கி நன்மை பயக்கிறது.

நல்ல விஷயங்களை வாழ்நாள் முழுவதும், படித்துக் கொண்டே இருந்தால்தான் உள்ளம் உயர்ந்த நிலையில் இருக்கும். பித்தளைப் பாத்திரத்தை தினமும் தேய்த்தால்தான் பளிச்சென இருக்கும். ஜபம், தியானம் முதலியவற்றை நாள்தோறும் செய்தால்தான் மனம் தூய்மை பெறும்.

தியானங்களில் பலவிதம் இருந்தாலும் பெரும்பாலோர் செய்வது உருவத் தியானம். சிவன், பார்வதி, முருகன் போன்ற கடவுள்களை பிரார்த்திப்பது உருவத் தியானம். அருவத் தியானமும் உண்டு. கடவுளை எல்லையற்ற ஆகாயமாக எண்ணுவது, பரந்த கடலாக இறைவனை எண்ணுவது, ஒளி வடிவத்தில் இறைவனை எண்ணுவது, போன்றவை அருவத் தியானங்களாகும். தியானத்தை நன்கு நிமிர்ந்து உட்கார்ந்து செய்ய வேண்டும். தியானத்திற்கு முன்னர் வினைகளை வேரறுக்கும் விநாயகனைப் பிரார்த்திக்க வேண்டும். பின்னர் ஆண்டவனை நோக்கி எல்லா உயிர்களுக்கும் சேர்த்துப் பிரார்த்திக்க வேண்டும். பின்னர் குருவைத் தியானிக்க வேண்டும். குரு, ஆயிரம் இதழ் கொண்ட தாமரையின் மீது அமர்ந்திருப்பதாக எண்ணித் தியானத்தில் ஈடுபட வேண்டும். பின்னர் குருவை இதயத்திற்குக் கொண்டு வந்து அங்கு எழுந்தருளியிருக்கும் இறைவனோடு ஐக்கியப்படுத்த வேண்டும். இதயத்தில் இறைவன் எட்டு இதழ்

## காலம் கெட்டுப்போச்சு!



பிரிட்டனின் ஸ்காட்லாண்டு பகுதியையொட்டிப் பல சின்னஞ்சிறு தீவுகள் உண்டு. இவற்றுள் ஒன்று ஃபௌலா. இங்கே சமீபத்தில் ஒரு காரின் ஜன்னலை சில ரௌடிகள் உடைத்து விட்டார்கள். இதில் அதிசயம் என்னவென்றால், அந்தத் தீவில் 81 ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு குற்றம் நிகழ்கிறது! 81 ஆண்டுகளுக்கு முன் ஒரு பெண்ணை இருவர் சேர்ந்து மானபங்கப் படுத்த முயற்சி செய்ய, அதற்காகத் தண்டனை பெற்றனர். இப்போது கார் கண்ணாடி உடைக்கப்படவே, அந்தத் தீவு வாசிகள், ''ஹூம்! காலம் கெட்டுப் போச்சு! ஒழுக்க சகாப்தம் முடிவடைந்து விட்டது'' என்று பெருமூச்சு விடுகிறார்கள்!

ஆதாரம்: கல்ஃப் டைம்ஸ்.
தகவல்: பிச்சுமணி.

கொண்ட செந்தாமரை மலரில் அமர்ந்திருப்பதாக எண்ண வேண்டும்.

இஷ்ட தெய்வத்தைத் தியானிக்கும் போது, கடவுளை வெறும் படம், விக்கிரகம் என்று மட்டும் எண்ணக் கூடாது. உடலும் உயிரும் கொண்ட உணர்வு மயமானவராகவும் அருள் பொலியும் முகத்தை உடையவராகவும், ஒளி பொருந்திய வடிவம் உடையவராக இருப்பதாகவும் எண்ணித் தியானத்தில் ஈடுபட வேண்டும். பிறகு இறைவனுடைய திருநாமத்தை உச்சரித்துத் தியானம் செய்ய வேண்டும். சிவனை வழிபடுபவர்கள் 'ஓம் நமச்சிவாய' என்றும் விஷ்ணுவை வழிபடுபவர்கள் 'ஓம் நமோ நாராயணாய' என்றும் முருகனை வழிபடுவோர், 'ஓம் சரவண பவ' என்றும் நாமத்தை உச்சரித்து ஜெபிக்க வேண்டும். சிலருக்கு இஷ்ட தெய்வத்தை இதயத்தில் கொண்டு வருவதில் சிரமம் இருந்தால், முதலில் பாதங்கள், பின்னர் இடுப்பு என்று அடி முதல் முடி வரை தனித் தனியாக மனத்தில் கொண்டுவர வேண்டும். இதற்கு உருவத்தைப் பார்த்துப் பார்த்துப் பழக வேண்டும். இறைவனை நோக்கி, ''உன்னை மறவாத நிலையை எனக்குக் கொடு; புற அழுத்தத்தைத் தாங்கக் கூடிய மனநிலையை எனக்குக் கொடு'' என்று பிரார்த்திக்க வேண்டும். தினமும் ஒரு மணி நேரம் இப்படித் தியானத்தில் ஈடுபட்டால் மனம் சுத்தமாகும், தீய சிந்தனைகள் விலகி ஓடும்; வாழ்க்கையில் மலர்ச்சி ஏற்படும்.

**அகில இந்திய அளவில் புகழ் பெற்ற பால்இயல் மருத்துவர் (செக்ஸாலஜிஸ்ட்) டாக்டர். நாராயண ரெட்டி பேசுகிறார்:**

மனிதனுக்குப் பசி, உறக்கம் இரண்டும் எவ்வளவு அத்தியாவசியமானதோ, அது போலவே செக்ஸ் உணர்வும் அத்தியாவசியமானது. இவை யாவும் இயற்கையான உணர்வுகள்.

செக்ஸ் என்கிற ஓர் இயல்பான உணர்ச்சியை நாம் ஏன் கட்டுப்படுத்த வேண்டும்? 'செக்ஸ் கட்டுப்பாடு' என்பதே அர்த்தமற்றது. செக்ஸினை முறைப்படுத்துதல் என்பதுதான் சரியானது. **Controlling Sex** என்பது தவறு; **Channelizing Sex** என்பதே சரி. அளவுக்கு மிஞ்சினால் எதுவும் விஷம் தான்!

'முறைப் படுத்துதல்' என்பதை எப்படிச் செயல்படுத்துவது? அதற்கு ஒரே வழி செக்ஸ் கல்விதான். எவை எவைகளை இந்தக் கல்வியில் சொல்லித் தரலாம் என்றெல்லாம், விஞ்ஞான பூர்வமாய் வரையறுத்து வைத்திருக்கிறார்கள். செக்ஸின் முக்கியத்துவத்தையும், பின் விளைவுகளையும் விவரமாய் எடுத்துச் சொல்வதன் மூலம் பொறுப்புள்ள குடிமகன்களை உருவாக்க முடியும்.



டாக்டர் ரெட்டி

இன்றைய இளைஞர்களில் பலர் ஏன் செக்ஸ் புத்தகங்களைப் படிக்கிறார்கள்? ஆபாச சினிமா பார்க்கிறார்கள்? சாலையோரத்தில் நின்று 'ஈவ் டீசிங்' செய்கிறார்கள்? அவர்களைக் கவரும்படியாய் வேறு அம்சங்கள் எதுவும் போதிய அளவில் இல்லாததுதான், விளையாட்டு, சமூக சேவை, சுய திறமைகளை வளர்த்துக் கொள்ள வாய்ப்புகள் இவை குறைவாய் இருப்பது தான் முக்கிய காரணம். இளைஞர்களின் மனங்களை அவர்களுக்கு ஆர்வம் உள்ள நல்ல விஷயங்களில் திசை திருப்பி உற்சாகப்படுத்த வேண்டியது ஆசிரியர்கள், பெற்றோர்கள் ஆகியோரது கடமை.

அதிக அளவில் திரையிலும், எழுத்திலும் கையாளப்படும் செக்ஸ், அதிகரித்து வரும் செக்ஸ் குற்றங்களுக்குக் காரணம் என்பதை ஒப்புக் கொள்ள முடியாது. இவை, ஒரு ஆரோக்கிய மனமுள்ள மனிதனைக் குற்றம் செய்யத் தூண்டாது. அடி மனத்தில், கிரிமினல் எண்ணமுடைய ஒருவன்தான் குற்றங்கள் புரிவான். ஆனால் ஒன்று. இத்தகையவர்களை மேலும் தூண்டி விடுவதாக எழுதப்படுகிற, திரையில் காட்டப்படுகிற செக்ஸ், மற்றும் வன்முறைக் காட்சிகள் இருக்கும் என்பதையும் மறுக்க முடியாது!

பேட்டி, கட்டுரை வடிவம்: **ப்ரியன்**

**எஸ். சந்திரமௌலி**

மேலட்டை வண்ணப்படம், புகைப்படங்கள்:

**யோகா**

மேலட்டை வண்ணச் சித்திரம்:

**ஜி. கே. மூர்த்தி**

டெபாசிட் இழப்பார்!

அமைதியில் போட்டி யிடட்டும்! சவால்!..

வேஷ்டி, சேலை ஓட்டுக்காகக் கொடுக்கல்லே, ஞாபகமிருக்கட்டும்! ஓட்டுக்கும், வேஷ்டி சேலைக்கும் சம்பந்தமில்லை! ஓட்டு வேறு.. வேஷ்டி சேலை வேறு! ஆமாம்.. ஓட்டு.. வேஷ்டி.. சேலை..





# கல்கி

1989 நவம்பர் 5
மலர் 48 இதழ் 14
சுக்ல ஐப்பசி 20



## எம். ஜி. ஆர். பக்தர்களின் வோட்டு!

பாரதீய ஜனதா கட்சி, ஜனதா தளம் ஆகியவற்றிடையே இன்னும் தொகுதி உடன்பாடு ஏற்படாமல் இழுத்துப் பறித்துக் கொண்டுதானிருக்கிறது. இந்த இதழ் கல்கி நேயர்களின் கரங்களை வந்து அடையுமுன் வேட்பாளர்கள் மனுப் பரிசீலனையும் பதிவும் முடிவடைந்திருக்கும். அதற்கு முன்னதாகத் தொகுதி உடன்பாடுச் சிக்கல்களில் சுமுகமான தீர்வு காணத் தலைவர்களுக்கு நல்லறிவைத் தருமாறு இறைவனைப் பிரார்த்திக்கிறோம். இந்த விவேகம் பிறக்கவில்லை என்றால், தேர்தலைத் திடீரென்று அறிவித்த ராஜீவின் உள்நோக்கமே வெற்றி பெற்றதாகிவிடும். பிறகு தேர்தலில் அவருடைய வெற்றியும் எளிதாகிவிடும். எதிர்க்கட்சித் தலைவர்கள் இதற்கு இடமளித்து விட மாட்டார்கள் என்று நம்பிக் கொண்டிருக்கிறோம்.

தேசிய முன்னணியின் தேர்தல் அறிக்கையில் வரவேற்கத்தக்க பல அம்சங்கள் உள்ளன. அவற்றுள் அடிப்படையானது சரிந்து வரும் தேசத்தின் கௌரவத்தை மீண்டும் நிலைநாட்டுவதாகும். இதை எப்படிச் சாதிப்பது என்ற நோக்கில் அமைந்ததுதான் அறிக்கையின் இதர அம்சங்கள். லஞ்ச ஊழலை ஒழித்தல்; போஃபர்ஸ், நீர்மூழ்கி பேரம், ஹெலிகாப்டர் ஊழல் போன்ற பலவற்றில் கமிஷன் பெற்றவர்களைக் கண்டுபிடித்து ரகசிய ஒப்பந்தங்களை அம்பலப்படுத்துதல்; தேர்தல் சீர்திருத்தங்கள்; மாநிலங்களுக்கு அதிக உரிமைகள்; டி. வி. — ரேடியோ ஆகியனவற்றைச் சுதந்திர நிறுவனங்களாகச் செயல்படச் செய்தல்; விலைவாசிகளை ஸ்திரப்படுத்த ஏற்ற பொருளாதாரக் கொள்கைகளை வகுத்து அமுல்படுத்துதல்; ஜாதி மதத் துவேஷங்களுக்கு முடிவுகட்டி பூசல்களைத் தவிர்த்தல்; பஞ்சாப் பிரச்னைக்கு விரைவில் தீர்வு; ஸ்ரீலங்கா பிரச்னையில் தமிழருக்குப் பாதுகாப்பு; பஞ்சாயத்துக்கள் — நகராட்சிகளுக்கு மெய்யான அதிகாரங்களை வழங்குதல் என்றிப்படிப் பட்டியல் நீள்கிறது.

'தேர்தல் அறிக்கை இருந்தால் போதுமா? இவர்கள் வென்று வந்தாலும் ஒற்றுமை நீடிக்குமா? அறிக்கையில் கண்டுள்ளவை செயலுருப் பெறுமா?' என்றெல்லாம் பலர் வினவலாம். 'தேசிய முன்னணிக்கு ஒரு வாய்ப்பு அளித்துப் பார்த்தால்தானே அவர்களால் என்ன சாதிக்க முடியும், அல்லது முடியாது என்பது தெரிய வரும்' என்பதே இதற்குப் பதில். இது ஒருபுறமிருக்க, 'தேசிய முன்னணி ஆட்சி நீடிக்குமா?' என்பதை விடவும் முக்கியமான கேள்வி, 'லஞ்சமும், ஊழலும், பொய்யும் நிறைந்த ஓர் ஆட்சிக்குத் தண்டனை தராமல் விடலாமா?' என்பதாகும். சில காலம் பதவியிலிருந்து இறக்கி வைத்திருந்தால் காங்கிரஸுக்குப் பயம் உண்டாகும். அடுத்த தேர்தலில் மறுபடி பதவிக்கு வந்தால் ஒழுங்காக நடந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் ஏற்படும்.

பாரத நாட்டு மக்கள் — அதிலும் குறிப்பாகத் தமிழக மக்கள் — மத்திய நாடாளுமன்றத் தேர்தல் வேறு, மாநிலச் சட்டசபைத் தேர்தல் வேறு என்று பகுத்தறிந்து முடிவெடுக்கத் தெரிந்து வைத்திருக்கிறார்கள். இப்போதும் அதே மாதிரி விவேகத்துடன் செயல்படுவார்கள் என்று கருதலாம். எம். ஜி. ஆர். பக்தர்கள் கூட, ஜெயலலிதா ஆதரவாளர்கள் கூட, இன்று தாங்கள் போடப் போகும் வோட்டு, மாநிலத்தில் ஜெயலலிதாவைப் பதவிக்குக் கொண்டு வருவதற்கு அல்ல என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். தேசிய அளவில் சிந்தனை செய்து, காங்கிரஸுக்கு எதிரான வோட்டுப் போடுவதே இன்று நாட்டுக்கு நல்லது என்று உணர்ந்து செயல்பட வேண்டும். ஏன், நீண்ட நாள் காங்கிரஸ் அனுதாபிகள் கூட, 'இந்த ஒரு தேர்தலில் காங்கிரஸுக்கு எதிராக வோட்டளிப்போம்; அடுத்த தேர்தலில் மறுபடி காங்கிரஸுக்கு வாக்களிப்போம்' என்று முடிவு செய்யலாம். இல்லையெனில், லஞ்ச ஊழல் — பொய்ப் பித்தலாட்டம் போன்ற அதர்மப் போக்குகளுக்கு நாம் துணை நின்று, அவை வேரூன்ற உரமிட்டவர்களாவோம். தீராப் பழி நம்மைச் சூழ்ந்துவிடும்.

மற்ற எல்லாரையும்விட திராவிட முன்னேற்றக் கழகத் தொண்டர்களுக்குத்தான் பொறுப்பு மிகவும் அதிகம்! 'கலைஞர்தான் இங்கே பதவியில் இருக்கிறாரே; இந்த தில்லித் தேர்தல் அவரைப் பாதிக்கவா போகிறது?' என்று அலட்சியமாக இருப்பது, ஆபத்தை விலைகொடுத்து வாங்கியதாக முடியும்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# தர்மம் வெல்லும்

இதிகாச காலத்திலிருந்து இன்றைய மசாலா வரை இறுதியில் பெறப்படும் நீதி யாவது எது? பிரச்னைக்கு இடம் வைக்கா மல் அதையே தலை(ப்பு)யில் சூட்டி விட்டார் கள்.

ஒரு பெண் விச்சரிவாளை எடுத்துக் கொண்டு பதின்மூன்று பேரை மாறி மாறி வெட்டிச் சாய்த்தது பிரமிக்கத்தக்க(!) சாதனைதான். அந்தப் பெண்ணைக் கைது செய்த காவல் அதிகாரி, அவளுக்குக் கணவன். இருபது வருடப் பிரிவுக்குப் பின் அப்போதுதான் சந்தித்த கணவன்! இந்த முடிச்சு போதாதா கதையோட்டம் உங் களை இழுத்துக் கொண்டு போக?

ரொம்பக் காலத்துக்குப் பிறகு, குரலா லும் நடிக்கத் தெரிந்த அந்த நடிகையைச் சந்திக்கும் போது மனசுக்கு எத்தனை இத மாய் இருக்கிறது என்கிறீர்கள்? வேறு யார், சுஜாதாதான்! கண்கலங்க நிற்கும் காக்கி யுடைக் கணவன் விஜயகாந்திடம், 'இத் தனை வருஷத்திலே என்னைச் சந்திக்க ணும்னு உங்களுக்கு ஒருவாட்டி கூடத் தோணலையா?' என்ற சாதாரணக் கேள்வி யைக் கேட்பதற்குள் குரலிலும் முகத்திலும் அவர் கொட்டும் பாவங்கள்! புதுசுகள் பாடம் படிக்க வேண்டும்.

விஜயகாந்துகளில் முதியவர் முதலிடம் பெறுகிறார். அந்தக் குரல் வளம், சும்மா பார்த்துக் கொண்டிருக்கும்போதே கண் கலங்கி நெகிழ்ச்சி காட்டும் உருக்கம், காவல் அதிகாரியின் மிடுக்கு, செயல்படும் வேகம் எல்லாமே படுபாந்தம். சுஜாதாவோடு குடும்பம் நடத்தும் பின்னணிக் காட்சியில் மாமனாரின் குத்தல் பேச்சுக்களை — கேவலங்களைத் தாங்கிக் கொண்டு ஒரு தலைகுனிவில் உள் குமுறலை வெளிப்படுத் தும் இடம் தொடுகிறது.

தாயிடம் உயிரையே வைத்திருப்பதை ஒவ்வோர் அசைவிலும் வெளிப்படுத்தும் ஜூனியர் விஜியிடம் சற்று மிகை தென்படு கிறது. அவரை நெருக்கிக் கொண்டிருக்கும் இக்கட்டான சோதனைகளுக்கு நடுவிலே விதியே என்று கௌதமியைக் காதலித்துத் தொலைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படு வதால் அவை எடுபடவில்லை.

பாவம் கௌதமி! ஏதோ துள்ளல் காதலி லேயே ரசிகர்களை அள்ளிக் கொண்டு விடலாம் என்று போட்ட கணக்குத் தப்பிப் போய் விட்டது. தூக்குக் கயிற்றை எதிர் நோக்கியிருக்கும் தாயை எப்படிக் காப்பாற் றப் போகிறோம் என்று தடுமாறிக் கொண் டிருப்பவரிடம் போய்க் காதல் களியாட்ட மும் தமாஷும் பண்ணினால் எடுக்குமா?

விஜயகாந்தின் வகுப்புத் தோழர் என்ற அந்தஸ்தைத் தாங்கிக் கொண்டு வரும் ஸ்ரீகாந்த் என்னமோ சாதிக்கப் போகிறார் என்று பார்த்தால்... பரிதாபம், கண்ணுக்கு முன்னால் கரைந்து போகிறார்.

இவருக்குச் சின்னி ஜெயந்த் தேவலாம். 'தப்பு தப்பு' என்று வாய்க்கு வாய் சொல்லிக் கொண்டு ஒரு செமியாக நடமாடிக் கொண் டிருந்து விட்டு, கடைசியில் ரொம்ப விவரம் தெரிந்தவர் மாதிரி விஜியைக் காப்பாற்றத் தான் குண்டடி பட்டு மண்டையைப் போடு கிறார்.

ஜெயில் காண்டிராக்டர் என்று எஸ். எஸ். சந்திரனை கோணல் மாணலாய் உலவ வும் பேசவும் விட்டு ஏதோ சிரிப்பு மூட்டப் பார்த்திருக்கிறார்கள். துணைக்குச் செந் தில், கோ. சரளா வேறு. இந்தக் கோஷ்டி யில் அப்பாக்காரராய் வரும் மொட்டையார் சற்று புத்திசாலியாய்த் தெரிகிறார்.

ஒரு பாலிஷ் வில்லனை அறிமுகப்படுத்தி யிருக்கிறார்கள். லட்சணமான மூஞ்சி. சிமான் தோரணை. தேவலாம்.

இளையராஜா தான் இயற்றிய பாடலை ஜிக்கியும் பாட அனுமதித்திருக்கிறாரே, ஆச்சரியம். 'பூவோடு காத்து வந்து...' இனிமைதான்.

அகலத் திரையை முழுசாய்ப் பயன்படுத் திக் கொண்ட காமெரா. பலமுறை பார்த்த உயர்நீதி மன்ற வளாகம் கூடப் புதுசாய்த் தெரிகிறது.

கொலை, மர்மம்தான் கரு என்றாலும் கதையின் உருவிலும் சாமார்த்திய டைரக்ஷ னிலும் கணவன் மனைவி, தாய் மகன் உறவே தூக்கலாய்த் தெரிகிற சென்டி மென்ட் பிலிம்!

— பி. எஸ். எஸ்.











# டார்டாய்ஸ்

## கொசு வர்த்திச் சுருள்

தயாரிப்பாளர் : பாம்பே கெமிக்கல்ஸ் லிமிடெட்
ஃபோர்ட், பம்பாய்-400 023. ஃபோன் : 273831.

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: சாந்திலால் பிரதர்ஸ், 7, காசிச் செட்டி சந்து, 2 வது மாடி, சென்னை — 600 079. ஃபோன்: 569986, 560414, 569826.

# இரண்டாவது சூரியன்

## 14

''உட்காருங்கள்! பானுமதி உள்ளே நுழைந்து வனிதாவையும் அவள் கூட வந்த இளைஞனையும் வரவேற்றாள்.''

''அப்போ... நீங்க வனிதாவுக்குத் தாய் மாமன்...'' மெல்லிய சிரிப்போடு பானுமதி சொல்ல வனிதா வெட்கப்பட்டாள்.

''உறவு வகையில தாய்மாமன்தான். ஆனா வனிதா நான் எடுத்து வளர்த்த குழந்தை. நீங்க வேற அர்த்தம் பண்ணிக்க வேணாம்.''

கொஞ்சம் வீச்சாய் எச்சரிக்கை என்பது போல் அவன் பேசினான்.

''டியூஷன் வச்சா வனிதா உருப்பட்டு டும்னு நினைக்கிறீங்களா...''

''உருப்படறதுன்றது வனிதா நல்ல மார்க் வாங்கி நிறையப் படிக்கறது இல்லீங்க. சந்தோஷமா இருக்கறது.''

''அப்ப வீட்டோட.....''

''இல்லீங்க. வீட்ல இருக்கறதை விட, வனிதா பள்ளிக்கூடத்துல சந்தோஷமா இருக்கும். நாலு பொண்களோட இருக்கறச்ச, இன்னும் அதுக்குத் தைரியமும் தெளிவும் வருது. என் வீடு சிரமங்க. பல தொந்தரவு.''

''என்ன தொந்தரவு?''

''கதை மாதிரி சொல்லணும். உங்களுக்கு நேரம் இருக்குங்களா?''

''பிரச்னையை முழுக்கத் தெரிஞ்சுக் கிட்டா எனக்கு என்ன செய்யலாம்னு சொல்லத் தோணும்.''

''எனக்கும் அமிர்தம் அக்காவுக்கும் பதினைஞ்சு வயசு இடைவெளி. என் நாலு வயசுல அக்காவுக்குக் கல்யாணம். நாங்க ரொம்ப வசதியா இருந்த நேரம். நிறைய சீரு செனத்தியோட கல்யாணம் பண்ணிக் கொடுத்தோம். அவங்களும் வசதியான வங்கதான். ஆனா அக்காவ நல்லபடி வச்சுக்கலை. இரண்டு தடவை கர்ப்பம் கலைஞ்சு போச்சு. 'உடம்பைத் தேத்திக் கிட்டுக் கவனமா பார்த்துக்கணும்; அது வரைக்கும் அமைதியா இருக்கணும்' னாங்க டாக்டருங்க. கேட்கலை. அக்கா புருஷன் முரட்டு சுபாவம். மறுபடி கர்ப்பம் வந்து, கலைக்க மருந்து சாப்பிடச் சொல்லி, சரியாச் சாப்பிடாட்டா வயத்துலயே புள்ளை செத்துடுமேன்னு பயந்து, அப்படிச் செத்துட்டா அக்கா உயிருக்கு ஆபத்துன்னு சொல்லி, எப்படியோ கஷ்டப்பட்டுக் காப்பாத்தினாங்க. இது பொறந்தது. மருந்தால கெட்டுப் போச்சோ, மனசு சரியில்லாத கெட்டுப் போச்சோ... இது சரியாயில்லை. ஏழு வயசுக்கு பர்ஸ்ட் ஸ்டாண்டர்ட் போனா. படிப்புல மட்டுமில்லை. எல்லா விஷயத்துலேயும் டல்லுதான். நடுவுல இவ அப்பா இறந்துட்டாரு.''

''எப்படி?''

''தூக்குப் போட்டு''

''ஐயோ...''

''அக்கா ஒரு மாதிரி ஆயிட்டாங்க. இதை எப்பவும் திட்டி அடிச்சு.. ஏண்டி பொறந்தே... உன்னாலதான்னு...''

''இவ என்ன பண்ணுவா? பாவம்.''

''பெரியவங்க சரியில்லை...''

''யாரு... புரியலை எனக்கு.''

''எங்கப்பாவுக்கு ஸ்பிரிட் வியாபாரம். அதுல சேர்த்த காசு. டி எய்ட்னு ஒரு லைசென்ஸ்ல ஸ்பிரிட் வாங்கி அதை ஏழைங்களுக்கெல்லாம் வித்து...''

''மர வேலைக்கு உபயோகிப்பாங்களே அதானே?''

''மர வேலைக்கு மட்டுமில்லை. அந்தப் பெயர்ல வாங்கிச் சாராயமா விக்கறது.''

''விஷமில்லையா?''

''விஷம்தான். உடம்புக்குக் கெடுதல் தான். அதுல ஏதோ கலக்கி...''

''ஏதோன்னா...''

''ரோஜனம், அரக்குத்தூள் இரண்டையும் கலக்கிக் கரைய வச்சு, அதை அரை லிட்டர், ஒரு லிட்டரா வித்துருவாரு. சட்டப்படி தப்பு. ஆனா நல்ல லாபம். அங்கங்கே மாமூல் கொடுத்து ஒரு நாளைக்கு, அப்பவே — இருபது வருஷம் முன்னாடி ஆயிரம் ரூபா லாபம் கிடைக்கும். சரக்கு முதலாளின்னுதான் பேரே அவருக்கு.''

''அடாடா! கேட்கவே கஷ்டமாயிருக்கே... அப்புறம்?''

''இதுல வந்த காசு புழங்கின வீடு எப்படி இருக்கும்? எங்க வீட்டுல எந்தப் பொண்ணும் நல்லா இல்லை. இது இப்படி மண்ணாந்தையா நிக்கறதுக்கும் அதான் காரணம்னுவாங்க எங்கம்மா.''

''வீட்டு வேலை செய்வாள்ள?''

''செய்யும். எல்லாம் ஏடாகூடம்தான். குழம்புக்கு ரெண்டு தடவை உப்புப் போட்டு

பாலகுமாரன்

ரும். அயர்ன் பண்றேன்னு அயர்ன் பாக்ஸை சூட்டோட அப்படியே துணி மேலே வச்சுட்டுப் போயிடும். துணி எரியுது பாரு.. அணைடின்னு கத்தினா, பக்கெட் தண்ணியைக் கொண்டாந்து கொட்டிச் சுவரு தரையெல்லாம் ஷாக் அடிச்சு... ஏதாவது வேலை செய்யப் போனா கலாட்டாலதான் முடியும்.''

''பாவம், தெரியலை.''

''தலைக்குத் தலை இட்டும் அடியும் வாங்குது பாவம். சரி வீட்டுல இருந்தாத் தகராறுன்னு டியூஷனுக்குக் கூட்டிட்டு வந்தேன். எத்தினி செலவானாலும்....''

''நான் டியூஷனுக்குக் காசு வாங்கற தில்லை. நான் என் பள்ளிக்கூடப் பசங்களுக்குச் சொல்லித் தர்றதில்லை. வேறே பள்ளிக்கூடத்துப் பசங்கதான் வருவாங்க. இவங்க ஸ்கூலுக்கு என்னை டெம்பரரியாத்தான் போட்டிருக்காங்க.''

''சொல்லியிருக்கு. யாரோ சாவித்திரி டீச்சர் வரலைன்னுதான் உங்களைப் போட்டிருக்காங்களாம். நியாமம் சொல்லித் தந்திங்களாம்.''

''வனிதாவுக்கு இந்த டியூஷன்னால ஏதாவது லாபம் இருக்குமா தெரியலை. அவளைச் சும்மா தொந்தரவு பண்ணாத விடறது நல்லது. மக்கு. தத்தின்னு பசங்க கேலி பண்ணி....''

''என்னங்க பண்றது.. வீட்ல இருந்தாக் கல்யாணம் பண்றேன்னு எவன் தலையிலே யாவது கட்டிடுவாங்க. யாருங்க இதை வச்சுக் குடித்தனம் பண்ண முடியும்?''

''நீங்களே கட்டிக்கலாமே!''

''நான் தூக்கி வளர்த்த குழந்தைன்னு சொன்னேனே... எனக்கு மனசு வரலை. அக்கா கூட அப்படித்தான் சொல்லுது. என்னால முடியாது.''

''ஞாபக சக்தி குறைச்சலா இருக்கா?''

''ஆமா... இவளுக்குக் குடுக்கற மருந்தும் தூங்க வைக்கிற மருந்துதான். இயற்கையிலேயே டல்லு. தூங்கித் தூங்கி இன்னும் டல்லாயிட்டா.''

இவள் ஒன்பது வரைக்கும் வந்தது அதிசயம்தான். தெளிவே இல்லை. பழுது பட்ட தாவரம். இதை எப்படிச் சேர்ப்பது. வீட்டிற்கு வந்து ஏடாகூடமாக ஏதாவது செய்தால்... சுமை இல்லையா.. தொந்தரவு தானே.. ஆனால் பாவம் அப்பன் சரியில்லாத நேரத்தில் பிறந்த குழந்தை. தாய் பாடுபட்டிருக்கிறாள். தன் வேதனையில் குழந்தையைத் துன்புறுத்தி... இன்னும் மக்காகி விட்டது. டியூஷன் இவள் பிரச்னைக்குத் தீர்வு இல்லை. சும்மா ஒரு சமாதானம்.

''நான் கொண்டாந்து விட்டுட்டுக் கூட்டிட்டுப் போறேங்க.''

''நீங்க என்னதான் சொன்னாலும் படிப்புன்னு சொல்லி, இவளைச் சிரமப்படுத்த றதை நான் விரும்பல. தவிர, இதுங்க ரெண்டுக்கும் இவ வர்றதால இடைஞ்சலா யிடக் கூடாது.''

அவன் மெல்ல நிமிர்ந்து பார்த்தான். அவன் கண்களில் கெஞ்சல் இருந்தது.

''தகப்பன் இல்லாத குழந்தை. வீட்டு நிலைமை சொல்லியிருக்கேன்... ப்ளீஸ்...''

''சரி வரட்டும். இரண்டு மாசம்தான். அப்புறம் நான் வேற ஸ்கூல் மாறிடுவேன். அப்புறம், இது பத்தி பள்ளிக்கூடத்துல பேச வேண்டாம் வனிதா.''

அது தலையாட்டிற்று.

அவன் எழுந்து நின்றான். பானுமதியின் குழந்தைகள் படுக்கையறையிலிருந்து ஹால் ஓரம் வந்தன.

''உங்க பசங்களா மேடம்?''

''ஆமா.''

''வெறுங்கையோட வந்துட்டோம். வனிதா, நீ சொல்லவே இல்லை பாரு.''

''பரவாயில்லை. வனிதா நாளை யிலேர்ந்து வரட்டும். இப்ப புத்தகம் ஒண்ணும் கொண்டு வரலை போலிருக்கே.''

''சரிங்க. வீட்லே வீடியோ டெக் இருக்கா?''

''இல்லை டீ.வி. இருக்கு. ஏன்?''

''எப்பவாவது லீவு நாள் சொல்லி அனுப்புங்க. நான் டெக் கொண்டு வரேன். நாலைஞ்சு படம் பார்க்கலாம்.''

''அதான் ஞாயிற்றுக் கிழமை டீ.வி.ல பார்க்கறோமே.''

''குழந்தைகளுக்கு கார்ட்டூன் படம் நிறைய இருக்கு மேடம், என்ஜாய் பண்ணுவாங்க.''

''பார்ப்போம். உங்க வீட்டு டெக்கா?''

''இல்லை. கடை.''

''ஏதோ ஸ்பிரிட் வியாபாரம்னீங்க.''

''அது எங்க அப்பா காலத்தோட சரி. இப்ப நான் வீடியோ லைப்ரரி வச்சிருக்கேன். பரத் வீடியோ. வேணும்கற போது சொல்லி அனுப்புங்க. வா, வனிதா.''

வெளியே மோட்டார் சைக்கிளில் மாமா பின்னால் அந்தப் பெண் அமர்ந்து கொண்டு கை அசைத்தது.

''பாவம்..'' தன்னை மீறி அந்தப் பெண் பற்றிச் சொல்லிக் கொண்டு உள்ளே திரும்பினாள்.

''ஆமா டீச்சர்.. போன வாரம் கூட, முதுகில பட்டை பட்டையா விசிறிக் காம்பால அடி வாங்கிட்டு வந்துச்சு. வலிக்கலியாடின்னா பழக்கமாயிடுச்சுங்கறா.''

''போதும்...'' பானுமதி உடம்பு சிலிர்த்துக் கொண்டாள்.

அந்த இரண்டு பெண்களுக்கும் பாடம் நடத்தும் போது, வனிதாவின் நினைவே அதிகம் வந்தது.

பிற்பகலில் தலைமை ஆசிரியைவிடம் போய் நின்று ஒன்பதாம் வகுப்புப் பெண்

கள் மூன்று பேருக்குத் தன் வீட்டில் பாடம் சொல்லித் தருவது பற்றித் தெரிவித்தாள். காசு இல்லை. தாற்காலிகமாகச் செய்வது என்று விவரித்தாள்.

''ஒழுங்கா திரும்பிப் போவுதுங்களா விட்டுக்கு. அது பார்த்துக்க' பானுமதி. ரோட்ல ஏதாவது ப்ராப்ளம் வந்து உன் பேர் கெட்டுடப் போவுது.''

''சரி மேடம்.''

''உட்கார். எப்படி இருக்கு வாழ்க்கை?''

''நல்லா இருக்கு.''

''சாவித்திரி மேட்டர் பெரிய ப்ராப்ளம்.''

''ஏன்.. என்ன ஆச்சு?''

''அந்த ஆள் விஷம் குடிச்சுட்டான்.''

''ஐயோ.''

''இவளுக்குப் பெரிசா லெட்டர் எழுதி வச்சுட்டுத் தற்கொலை முயற்சி செய்ய... இப்ப போலீஸுக்கு இவ பதில் சொல்லிக் கிட்டிருக்கா.''

''பேப்பர்ல...''

''நாளைக்கு வரும். சாவித்திரிக்கு என்ன செய்யறதுன்னு புரியலை. அவன் பக்கமா மொள்ள சாயறா. முதல் மனைவியை அவன் டைவர்ஸ் பண்ண முடியுமான்னு இவளே லாயரைக் கன்ஸல்ட் பண்றா.''

''ஐயோ.. அது சிரமம் மேடம்.''



"அவன் மேலே லவ்வும் இருக்கு. அவன் இப்படி ஏமாத்திட்டானேன்னு கோபமும் இருக்கு. லேசுஸ் செண்டிமெண்ட்ஸ்ல மாட்டிக்கிட்டு முழிக்கறதுதான் பெரிய வேதனை."

"என்ன செய்யப் போறாளாம்?"

"நானும் விஷம் குடிச்சு செத்துடலாமான்னு இருக்கேன், மேடம்னு டெலிபோன்ல அழுகை..."

"கடவுளே... தேவையா இது?"

"நானும் அதைத்தான் சொன்னேன், பானுமதி. லஞ்சுக்கப்புறம் ஒரு பீரியட் ஓய்வுதானே. நாம இரண்டு பேரும் சாவித்திரி வீடு வரைக்கும் போயிட்டு வரலாமா? இங்கே வரச் சொல்லலாம்னு நினைச்சேன். அவ இங்கே வந்து அழுது. கூட்டம் கூடி நல்லா இருக்காது."

"நான் வரேன், மேடம். அந்த முதல் மனைவி."

"அவங்களுக்கு ஒண்ணுமே தெரியலையாம். இன்னிக்குத்தான் அந்த அம்மாவ நேர்ல பார்த்திருக்கா. ஆஸ்பத்திரியில பசிக்குது பசிக்குதுன்னு அழுதுதாம்."

"கொடுமை இல்லை...?"

"ஏமாத்தியிருக்காங்க. பிறவிலேர்ந்து அந்தப் பெண் சரியில்லை."

"வனிதான்னு ஒரு பெண் ஸ்நேன்தல..."

"ஆமா சரக்கு முதலாளி பேத்தி கொஞ்சம் டல்லுதான்."

"அவங்க வீட்டுலேர்ந்து வந்தாங்க. டியூஷன் வேணும்னாங்க. படிப்பே வேணாம்னேன். நிறைய வீட்டுப் பிரச்னை பத்திச் சொல்லிக் கெஞ்சினாங்க."

"வனிதா ரொம்ப மோசம்னு சொல்ல முடியாது. மெமரி பவர் கம்மி. ஐ க்யூ மைனஸ். செவன்த்ல இருக்கறப்பவே டாக்டர்கிட்டே காட்டி ரிப்போர்ட் கேட்கச் சொன்னேன். சிவப்பா ஒரு பையன்தான் வந்து பேசினார்."

"பரத்வாஜன்?"

"ஐ திங்க் ஸோ" "படிப்புத்தான் முடியாது. மத்தபடி ட்ரஸ் சென்ஸ், சுத்தம் எல்லாம் இருக்கு. கொஞ்சம் எக்ஸ்ட்ரா கேர் எடுத்தாச் சரியாயிடும்னு ரிப்போர்ட் வந்தது."

"எனக்குத் தோணலை மேடம். பசங்க கேலி பண்ணுதுங்க அவளை. அவ கிளாஸ் பசங்க பேரே அவளுக்குத் தெரியலை."

"தெரியும். கேட்டா மறந்துடும். அந்த மறதிக்குப் பயம் காரணம். பயம் கொடுத்த குடும்பம் காரணம். சின்ன வயசுல மிரட்டி, அடிச்சு மக்காக்கிட்டாங்க. எப்படி வரும். வழி தெரியாத, மறந்து போய் எங்கேயாவது நிக்கப் போவுது?"

"இல்லை. அவ அங்கிள் தினமும் கூட்டிட்டு வந்து வுட்டுட்டு, முடிஞ்சதும் திருப்பிக் கூட்டிட்டு போறேன்னாரு."

**சி**னாலாக்குப் போன அரை மணியில் தலைமையாசிரியை உடனே கூப்பிடுவதாய்த் தகவல் வந்தது.

"பானுமதி.." மேடம் பதற்றமாய் இருந்தாள்.

"என்ன மேடம்?"

"சாவித்திரி ஸ்லீப்பிங் பில்ஸ் சாப்பிட்டுட்டாளாம்."

"ஐயோ.."

"ராயப்பேட்டை ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்காங்களாம். அவங்கப்பா போன் பண்ணினாரு."

"உடனே போலாமா மேடம்?"

"போய் என்ன பானுமதி பண்ணப் போறோம்? ஷி சஸ் ஸிங்கிங்."

போன வருஷம் மழை பெய்த ஒரு பிற்பகல் சாவித்திரி வகுப்பில் பெண்களுக்கு நடுவே சினிமாப் பாட்டுப் பாடிக் கொண்டிருந்தாள் என்று குற்றச்சாட்டு வந்தது.

"காவேரி ஓரம் கவி சொன்ன காதல்
கதை சொல்லி நான் பாடவா – உள்ளம்
அலைமோதும் நிலை கூறவா – எந்தன்
கனிவான பாடல் கதையாகும் முன்னே
கனவான கதை கூறவா – பொங்கும்
விழி நீரை அணை போடவா.

சாவித்திரி இந்தப் பாட்டுத்தான் பாடினாளாம். பானுமதிக்கும் அந்தப் பாட்டு மனகன் ஒடிற்று.

(தொடரும்)



திருப்பதி: "திரும்பத் திரும்ப இதே கூண்டில் வந்து நிக்கறியே, உனக்கு வெட்கமா இல்ல...?"

திருடன்: "நீங்க வேணா சொல்லி, புதுசா, வேற கூண்டு வாங்கிடச் சொல்லுங்க..."

— ஆர். வசந்தகுமார்.

ஆம்ப்ரோ மில்க் பேஸ்

# ஸ்கூல் குழந்தைகளின் பிஸ்கெட்




பாலில் உள்ள எல்லா
ஊட்டச்சத்துக்களும் அடங்கியது.

**கா**லையில் இருந்து சிதம்பரத்து வீதிகளில் அலைந்து அலைந்து கால்கள் வலித்தன.

"ஏதோ வேலை இருக்குதுன்னு என் சிதம்பரத்துப் பிரெண்ட் சொன்னான். போய்ப் பாரேன்!" அப்பா பத்து ரூபாயை நீட்டினார். வெறும் வாய் உபசாரணையை அவர் பெரிதாய் எடுத்துக் கொண்டிருந்தார். முதலிலேயே தெரியும்! முகம் முறிக்க மனமில்லை! இதோ ஊருக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறேன்.

'காப்பி குடிப்போமா?' வறண்ட நாக்கு விண்ணப்பித்தது! பையில் இருந்த ஐந்து ரூபாய், டிக்கெட் சார்ஜ் போக ஒரு ரூபாய் தான் உதிரி என்று எச்சரித்தது.

'சாதாரண சோடா குடிக்கலாம்!' அந்த ஓட்டலுக்கு எதிரே இருந்த 'சர்பத் சென்டரை' நெருங்கினேன். என்னை உரசிக் கொண்டு 'புதுவை — நாகப்பட்டினம்' பஸ் நின்றது.

"டிபனுக்குப் பத்து நிமிஷம் நிற்கும் சார்!" கண்டக்டர் இறங்குமுன்னர் அவர் குரல் இறங்கியது.

'இதில் இடம் கிடைத்தால் நாற்பது நிமிடங்களில் மாயவரம் போய்விடலாம்!' கண்டக்டரைத் தயங்கியபடியே அணுகினேன்.

"மாயவரத்துக்கா?" ஏளனமாய்க் கண்டக்டர் உதட்டைப் பிதுக்கவில்லை. "இங்கே ரெண்டு இறங்குதுன்னு நினைக்கிறேன்! வெயிட் பண்ணுங்க!" மரியாதையாய் முறுவலித்தார். மகிழ்ச்சியோடு தலையாட்டினேன்.

பஸ்ஸிலிருந்த கூட்டம் பசியோடும், களைப்போடும் இறங்கியது.

"எனக்கு குல்பி வாங்கித் தர்றியா?" படிகளில் நின்று கொண்டு சத்தியாக்கிரகம் செய்தது ஏழு வயது ஒன்று!

"இங்கே அதெல்லாம் இருக்காது. சனியனே! பின்னாலே நிக்கறாங்க பாரு!" முதுகில் அவனது தந்தை அறைந்த அதே நேரம் —

"ப்ப்! ப்ப்!" யாரோ உதட்டை மடித்து எழுப்பும் வினோதத் தொடர் ஒலி கேட்டுத் தலைகள் எல்லாம் திரும்பின.

"ந்த்த... ர ா ஷ ஷ ா..... செயே வெஷ்ஷா..." பாடியபடி ஆடினான்.

**வீ**தியின் நடுவே, பஸ் சன்னல்களைப் பார்த்தபடி, இரண்டு கைகளையும் தோளுக்கு மேலே விரித்துக் கொண்டு, வேகமாய் ஒரு குறவர் குலச் சிறுவன் ஆடிக் கொண்டிருந்தான்.

சிக்கேறிக் கிடந்த தலையில் தூக்கணாங் குருவிக் கூடு போலச் சுள்ளி சுள்ளி முடிகள்! சின்னஞ்சிறிய கொண்டையை ஒரு வண்ணத் துணி சுற்றியிருந்தது. வெற்றுடம்பு இடையில் சிறிய கோவணம்! அரைஞாண் கயிற்றின் ஓர் ஓரத்தில் சுருக்குப் பை! உடல் எங்கும் அழுக்குத் தீவுகள்! கண்களில் கூடு கட்டிய பீளை.

"ஷாமியோவ்... ஷாமியோவ்!" குரல் ஒங்கும் போதெல்லாம், விரிந்த உதடுகளுக்கு இடையே தெரிந்த பற்களில், வெண்மையைத் தவிர, வேறு எல்லா நிறங்களும் ஒளிர்ந்தன.

"ஓவ்... ஓவ்!" ஓங்காரமாகக் கூவினான். தலைக்கு மேலே தூக்கிய கைகளில், ஒன்றைக் கீழே கொண்டு வந்து ஆடினான். அடுத்த நொடி வலது கையை இடது அக்குளில் வைத்து, இடது கையால் அடித்து, ஓசை எழுப்பினான். பின் இரண்டு கைகளையுமே பின்னோக்கிக் குறுக்காக மடித்து, முதுகை அறைந்து கொண்டான். ஆனால் ஒரு நொடி கூட நிற்காமல், மூச்சிரைக்க ஆடினான்.

**ப**ஸ்ஸில் உட்கார்ந்திருந்த, தூங்கிக் கொண்டிருந்த முகங்களில், திடீரென உயிர்ப்பு! வெளியே சோடா குடித்துக் கொண்டிருந்த கண்களில் பரவசம்! சிகரெட் உறிஞ்சிய உதடுகள் புகையோடு, புன்னகையையும் வெளிப்படுத்தின.

"முருகா... முருகா! எழுந்திருடா! தோ... பாரேன்!" ஒரு காஞ்சிபுரம் தன் ஆறு வயது மகனை அக்கறையாய் எழுப்பிக் காட்டியது! தூக்கம் தெளியாத கண்களில் திடீரெனத் துள்ளல் வரிகள்!

"என்னாங்க இது? இந்தப் பையன் இப்படி ஆடறான்?" வியப்பின் விளிம்பையே தொட விரும்பினாற்போல் விழிகள் விரிய ஒரு பெண்மணி பஸ்ஸில் இருந்து எட்டிப் பார்த்தாள்.

"இவன் என்னம ஆடறான்? நான் அண்ணாமலை யுனிவர்சிடியிலே படிக்கிறப்போ... கூட்டங் கூட்டமா ஆடுவானுங்க! சின்னக் குட்டியெல்லாம் ஜோக்கா ஆடுங்க!" அவருள் மாணவப் பருவத்துக் குறும்புகள், மலரும் நினைவுகளாய்ப் படர்ந்தன.

'கோல்ட் ஸ்பாட்டை' உறிஞ்சிய ஒரு கூடுதார் தன் 'பேபிச் சர்ட்டிடம்' "சோ ஃபன்னி டார்லிங்!" என்று வெயிலில் வியர்வை வழிய ஆடும் சிறுவனை வெகுவாய் ரசித்தது, தன் வீட்டு நாய்க் குட்டியின் சேஷ்டையில் பூரிப்பது போல!

ஓட்டலின் உள்ளிருந்து வந்த கிளீனர் பையன் "ஒத்துடா!" என்று கட்டளையிட்டபடி, டிரைவர் சீட்டைத் திறந்து, தண்ணீர் பக்கெட்டை எடுத்தான்! ஏதோ நினைத்தவனாய், குவளைத் தண்ணீரை அவன்மேல் ஊற்றினான்! பலர் அவனது குறும்பை ரசித்தனர்.

"ஷாமீ?" சிலிர்த்து, உடலைக் குலுக்கி ஒரு கணம் அவனை முறைத்தான். பின் ப னை ழ ய ப டி, "ராஷ்ஷா செயெ வெஷ்ஷா..." எனப் பாடினான்.

"ஷாமீ... ஷாமீ..." கண்களும் கையேந்தின. கூடுதார் ஒரு பத்துப் பைசா நாணயத்தை அலட்சியமாய்த் தூக்கி எறிந்தது! பாய்ந்து எடுத்த சிறுவன், மீண்டும், "ஷாமீ... ஷாமீ!" என்று கரைந்தான்.

"ஆடுகின்றானடி தில்லையிலே!" டீக் கடையில் 'சோனி' அலற, சிகரெட் புகைத்த இளைஞன் ஒருவன், தன் நண்பன் காதுகளில்

# மின்மினியிடம் கையேந்தும் மின்னல்கள்!



ஏதோ சொல்ல...

"அட்டகாசம்டா மச்சி! ஆடுகின்றானடி இல்லையிலேன்னு 'கேப்ஷன்' போடறோம்! இவனைப் பத்தி எழுதறோம். நறுக்கென்று நாலுவரிக் கவிதைப் போட்டியிலே நமக்குத் தான் நூத்தைம்பது...." துள்ளினான் அவன் நண்பன்!

ஓட்டலில் இருந்து கொஞ்சம், கொஞ்சமாய் 'நிரம்பிய வயிறுகள்' நிம்மதியாய் வெளியே வந்தன. எல்லாக் கண்களும் அவனையே மொய்த்தன. கூட்டம் வர, கூக்குரலை — ஆட்டத்தின் வேகத்தை உயர்த்தினான்.

"ஹனி லுக்!" அலறினாள் ஒரு 'ஹிப்பினி!'

"வாவ்!" என்று களித்த அவள் தோழன் "மை காமிரா... காமிரா.... க்விக்!" பரபரத்துக் கைகளை அவனிடம் நீட்டினான். அடுத்த நொடி அவனுடைய விடியோ சிறுவனின் அபிநயங்களை அணு, அணுவாய்ச் சிறைப்படுத்தியது! ஹிப்பினி தன் 'யாஷிகாவை' வெவ்வேறு கோணத்துக்குத் திருப்பினாள்.

எனக்குள் எரிச்சல் எழுந்தது.

'டேய் வெள்ளைக்காரா, இதையெல்லாம் உன் நாட்டுப் பத்திரிகையிலே 'இண்டியன் காலரி'ன்னு போட்டு ஏளனப் படுத்துவே இல்லே....இதேபடத்துக்கு'போட்டோ ஆப் தி இயர்' பரிசு வாங்கித் துள்ளுவே!' அவனது காமிராவைத் தட்டிவிடக் கைகள் துடித்தன.

"சொந்தமா ஒரு வேலை தேடிக்க வக்கு கிடையாது! இந்த வீண் வேலை எதுக்குடா?" அப்பா உறுமுவார்! அடங்கிப் போனேன்.

வெற்றிலைக் கடையில் 'பான் பராக்' வாங்கிய ஜோல்னாப் பைக்காரர் அச்சிறுவனை வெறித்துப் பார்த்தார். அவர் கண்களில் வித விதமான உணர்வுக் கோலங்கள்! திடீரென்று தன் பையை வேக, வேகமாய்த் துழாவினார். கையை உதறிக் கொண்டு பஸ்ஸுக்குள் ஓடினார்.

பர்சைத் தேடுகிறாரா?" என் சந்தேகம் 'மளுக்' கென்று முறிந்தது.

வந்தவர் கையில் ஒரு 'ஸ்கெட்ச்' பேனா! ஜோல்னாப் பையிலிருந்து லெட்டர் பேட் போலிருந்த ஒரு நோட்டுப் புத்தகத்தை எடுத்தார். ஆடும் சிறுவனை, அவன் ஆடும் சூழலை, சிறு கோடுகளில் கொண்டு வந்தார். வெற்றிகரமாய் முடித்துவிட்டு என்னைப் பார்த்தார்.

"இயக்கம்' என்ற த லை ப் பி லே யுனெஸ்கோ ஓவியப் போட்டி ஒண்ணு இருக்கு! இது அருமையா வரும்!" என்றவர் ஐந்து பைசாவைத் தூக்கி எறிந்தார். முகத்தில் 'முல்லைக்குத் தேர் கொடுத்த' பெருந்தன்மை!

"பரிசு எவ்வளவு?" தாளாமல் கேட்டேன்.

"பத்தாயிரம்!" ஜோல்னாப்பை தோளைக் குலுக்கியது!

"அட்வான்ஸ் கங்கிராட்ஸ்!" கசப்பை விழுங்கியபடி வாழ்த்தினேன்.

ஓ..... இதென்ன....? இங்கே கையேந்துவது யார்? இந்தச் சிறுவனா, அல்லது இவர்களா?

இது என்ன வக்கிரம்? வெயிலில் ஆடும் இவனைப் பார்க்கும் பலஜோடிக் கண்களில் ஒன்றில்கூடப் பரிதாபத்தின் ரேகையே இல்லை! தூக்கி எறிந்த காசுகளில் கருணை தூசாய்க் கூட ஒட்டியிருக்கவில்லை! அதுகூட மன்னிக்கப்படலாம்! ஆனால், அவனது வறுமைத் தாண்டவத்தைத் தங்கள் சுயநலத்துக்குப் பயன் படுத்துகிறார்களே.... எங்கிருந்து வந்தது இழிவு மனப்பான்மை!

குமட்டிக் கொண்டு வந்தது! மீண்டும் அவனைப் பார்த்தேன். ஒட்டிய வயிற்றின் ஓலமாய் அவன் பாடல் ஒலித்தது! ஆமாம் சத்துணவு, முட்டை என்று எத்தனையோ நல்வாழ்வு ஓடைகள்! அவை எதுவுமே இவனது காய்ந்த வயிற்றை நனைக்கக் காணோம்! ஊரில் எத்தனை, எத்தனை சமூக நிறுவனங்கள்! ஒன்றுகூட இவனுக்கு ஏன் நிழல் வழங்கவில்லை? இவனது அவலத்தைப் பத்திரிகையில் ஆசிரியருக்குக் கடிதம் பகுதியில் படம்பிடிக்கப் போகிறேன்! 'இவனுக்கு ஏதாவது வழி கிடைக்குமா?' என்று கேள்விக்குறியை எழுப்பப் போகிறேன்! அவ்வளவுதானா? மற்றவர்களைக் கேலிசெய்த நான் வெறும் பரிதாபத்தைத் தாராளமாய்ப் பரிமாறுகிறேனா? நோ.... நோ......

ஓட்டலுக்குள் ஓடினேன். கையில் இருந்த காசுக்கு மசால்தோசை, இரண்டு இட்லி என்று வாங்கினேன்! ஆவேசமாய் அந்தச் சிறுவன் கையில் திணித்தேன்!

இதை எதிர்பார்க்காத அந்தக் கண்களில் பளிச்சென்று மின்னல்! நன்றி கூடச் சொல்ல நேரமில்லாமல், பொறுமையில்லாமல் பொட்டலத்தைப் பிரித்தான்! ஆடிய வேகத்தை விட அதிகமான வேகத்தோடு தன் பசி நெருப்பை அணைக்கத் தொடங்கினான்.

டிரைவரும், கண்டக்டரும் வெளியே வந்தனர்.

"எல்லாரும் பஸ்ஸிலே ஏறுங்க!" கண்டக்டரின் கட்டளைக்கு வெளியே சிதறியிருந்த கூட்டம் செவி சாய்த்தது.

டிரைவர் வண்டியை 'ஸ்டார்ட்' செய்தார்.

சீறிக்கிளம்பிய பஸ்ஸை ஏக்கத்துடன் பார்த்தேன்! நாற்பது கிலோமீட்டர் நடக்க வேண்டும். ஒரு நிமிடந்தான்.

சிறுவனைத் திரும்பி நோக்கினேன். இலையில் கைகளைத் துடைத்தவன் என்னை வணங்கினான்.

அவனது முகத்தில் ஆயிரம் வாட் நன்றி வெளிச்சம்! அந்த ஒளிவெள்ளத்தில் மனத்துக்குள் படர்ந்த மலைப்பும், கால்களில் எட்டிப் பார்த்த களைப்பும் மறைந்து போனது.

கம்பீரமாய் நான் நடக்கத் தொடங்கினேன்.

# பாதுகாப்பு.
# நீண்டகால உழைப்பு.
# அதுவே வீலன்.



பாதுகாப்பு : வீலைன் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டரில் மூன்று பாதுகாப்பு அம்சங்கள் உள்ளன : அளவுக்கு அதிகமாக உஷ்ணமடைவதை தவிர்த்திட ஒரு தெர்மோஸ்டேடிக் டெம்பரேச்சர் கண்ட்ரோல். கூடுதலான அழுத்தத்தை உருகித் தடுத்திட ஒரு ஃப்யூஸிபிள் பிளக். மற்றும் ஒரு பிரஷர் ரிலீஸ் வால்வு.

நீண்ட கால உழைப்பு : இதன் விசேஷமான உட்புறக் கலம், பாதுகாப்பான விட்ரஸ் எனாமல் மூலம் பூசப்பட்டுள்ளது. இது துருப்பிடித்தலுக்கு ஒரு ஒப்பற்ற தடுப்பாகும். இத்தொழில்நுட்பம், அமெரிக்காவில் தயாரிக்கப்படும் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர்களில் பயன்படுத்தப்பட்டு வெற்றி பெற்றுள்ளது.

வீலைன் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர்ஸ் வழங்குவோர், வோல்டாஸ். அவை பாதுகாப்பானவை, நம்பகமானவை, நீடித்துழைப்பவை . . . ஆண்டாண்டுகளுக்கும்.

**வீலன்**

ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர்



CLARION/B/V/128/173 TAM



விற்பனைக்கு விடுப்போர் :
**வோல்டாஸ் லிமிடெட்**
அப்ளையன்ஸஸ் பிஸினஸ் குரூப்
19, ஜே.என். ஹெரிடியா மார்க்,
பலார்ட் எஸ்டேட்,
பம்பாய் 400 038

வோல்டாஸ்
**வீலன்**

*நம்பகமான வீட்டுபயோக சாதனங்கள்*

# பொன்னியின் செல்வன்

அத்தியாயம் 37

## இரும்பு நெஞ்சு இளகியது!

வெட்டை மண்டபத்துக்குள் வந்தியத்தேவனையும் மணிமேகலையையும் பார்த்து விட்டு நந்தினியும் சிறிது திகைத்துப் போனாள்.

"ஓஹோ! நீங்கள் எப்படி இங்கே வந்தீர்கள்?" என்று கேட்டாள்.

"தேவி! தங்கள் கட்டளை என்று தங்கள் தோழி கூறியபடியால் வந்தேன். பெண் புத்தியைக் கேட்டிருக்கக் கூடாது என்று இங்கு வந்த பிறகு தெரிந்து கொண்டேன்" என்றான் வந்தியத்தேவன்.

"அக்கா! நான் இவருக்குப் புத்தி கூறவில்லை; என்னுடன் தங்களைப் பார்க்க வரும்படி வேண்டிக் கொண்டேன்!" என்றாள் மணிமேகலை.

நந்தினி தனக்கு முதலில் உண்டான திகைப்பைச் சமாளித்துக் கொண்டு புன்னகை புரிந்தாள்.

"என் அருமைத் தோழி! பெண்களாகிய நாம் புருஷர்களை வேண்டிக் கொண்டால், அது புத்தி கூறுவது போலத்தான்!" என்றாள்.

"புத்தி கூறுவது போல மட்டுமா? கட்டளையிடுவது போல என்று சொல்லுங்கள், தேவி! தாங்கள் என்னை அழைப்பதாகச் சொல்லி இளவரசி என்னைக் கைப் பிடியாகப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தாள். அதன் பலன் நான் இந்தக் கொலைகாரர்களிடம் சிக்கிக் கொள்ள வேண்டியதாயிற்று!" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! இங்கே நடந்திருப்பதைப் பார்த்தால், இவர்கள் கொலைகாரர்கள் என்று தோன்றவில்லையே? நான் இப்போது இங்கு வந்திராவிட்டால், தாங்கள் அல்லவோ இவர்களையெல்லாம் கொன்று தீர்த்திருப்பீர்கள் போலிருக்கிறது!"

"அக்கா! இவர்கள் கொலைகாரர்கள் தான்! சற்று முன் இவர்கள் இவரை வாலில்லாக் குரங்குடனே சேர்த்துக் கட்டி விட்டார்கள்!...."

நந்தினி இலேசாகச் சிரித்த வண்ணம் "மணிமேகலை! முன்னொரு சமயம் இவர் இந்த வாலில்லாக் குரங்கின் பின்னால் ஒளிந்து கொண்டிருந்தார் என்று சொன்னாய் அல்லவா? அது இவர்களுக்கு எப்படியோ தெரிந்திருக்கிறது!" என்றாள்.

"எப்படியோ இல்லை, அக்கா! நீங்கள் வருவதற்கு முதல் நான் இந்த வேட்டை மண்டபத்தில் நான் பார்த்ததாகச் சொன்னேனே, அந்த மனிதர்கள் தான் இவர்கள்!

அமரர் கல்கி

அன்றைக்கே இவரைத் துரத்திக் கொண்டு வந்தார்கள். நல்ல வேளையாக இவர் அவர்களிடமிருந்து தப்பித்து ஓடி விட்டார்!....''

''மறுபடியும் இன்றைக்கு இவரை நீயே இவர்களிடம் கொண்டு வந்து சேர்த்தது ஏன், மணிமேகலை? இந்த வழியில் எதற்காக இவரை அழைத்துக் கொண்டு வந்தாய்?''

''அக்கா! சற்று முன் என் தமையன் கந்தமாறன் தங்களைப் பார்க்கப் போகிறேன் என்று சொல்லிக் கொண்டிருந்தான். அவன் கண்ணில் படவேண்டாம் என்பதற்காக இந்த வழியில் அழைத்து வந்தேன். அதுவே நல்லதாய்ப்போயிற்று. இல்லாவிட்டால், இந்தக் கொலைகாரர்கள்....''

''தங்காய்! இவர்கள் கொலைகாரர்கள் அல்ல. இவர்கள் இவரைக் கொல்லவும் வரவில்லை. இரண்டு மூன்று தடவை இவர் இவர்களிடம் தனியாக அகப்பட்டுக் கொண்டிருக்கிறார். ஆனாலும் உயிரோடு விட்டிருக்கிறார்கள். இதன் உண்மையை நீ இவரைக் கேட்டே தெரிந்து கொள்ளலாம்.''

''அப்படியானால், இவர்கள் யார், அக்கா! சற்று முன்னால் இவர்கள் கூறியதுதான் உண்மையா? இவர்கள் தங்களுக்குத் தெரிந்தவர்களா? தங்களை அழைத்துக் கொண்டு போவதற்காக வந்தவர்களா?'' என்று மணிமேகலை வியப்புடன் கேட்டாள்.

''ஆம், தோழி! என்னைக் காப்பாற்றி அழைத்துப் போக வந்தவர்கள். எல்லாம் விவரமாகச் சொல்கிறேன். நீங்கள் இருவரும் என்னுடன் அடுத்த அறைக்கு வாருங்கள்! இவர்கள் இங்கேயே இருக்கட்டும்!'' என்றாள் நந்தினி.

பிறகு ரவிதாஸனைப் பார்த்து ''மந்திரவாதி! இந்த இருவரில் ஒருவருக்கு நீங்கள் ஏதேனும் தீங்கு செய்தால், அதை எனக்குச் செய்த தீங்காகவே கருதுவேன். இவர்களை நீங்கள் இனி எந்த நிலைமையில் எங்கு சந்திக்க நேர்ந்தாலும் மிக்க மரியாதையாக நடத்த வேண்டும்!'' என்றாள்.

ரவிதாஸன், ''தேவி! மன்னிக்க வேண்டும். இந்த வாலிபனுக்கு நம்முடைய சங்கேதக் குரல் தெரிந்திருக்கிறது. சற்று முன் ஆந்தைக் குரல் கொடுத்தது இவனேதான்!'' என்றான்.

''அதிலிருந்தே இந்த வீரன் நம்மைச் சேர்ந்தவன் என்று தெரிய வில்லையா? மந்திரவாதி! உன்னுடைய புத்திக் கூர்மை எங்கே போயிற்று? போனது போகட்டும். இனி, நான் மறுபடியும் தெரியப்படுத்தும் வரையில் இங்கே சத்தம் எதுவும் கேட்கக் கூடாது! ஜாக்கிரதை!'' என்றாள் நந்தினி.

பிறகு, நந்தினியும் மணிமேகலையும் வந்தியத் தேவனும் யானைமுக வாசல் வழியாக நந்தினியின் அறைக்குள்ளே பிரவேசித்தார்கள். கதவும் உடனே அடைத்துக் கொண்டது.

தங்காய்! நீ மிக்க புத்திசாலி! இவரை வேட்டை மண்டப வழியாக அழைத்து வந்தது நல்லதாய்ப்போயிற்று. உன் தமையன் இப்போதுதான் இங்கிருந்து போகிறான். ஆதித்த கரிகாலரை அழைத்து வருவதாகச் சொல்லிப் போயிருக்கிறான். அதற்குள் உங்களை நான் அனுப்பிவிட வேண்டும். உங்களிடம் விடை பெற்றுக் கொள்ளவும் வேண்டும்!'' என்றாள் நந்தினி.

''அக்கா! இது என்ன? தங்கள் கணவரைப் பற்றி உண்மையை அறிந்து வர இவரை அனுப்பப் போவதாக வல்லவோ சொன்னீர்கள்? தாங்கள் விடை பெற்றுக் கொள்வதாகச் சொல்கிறீர்களே?'' என்றாள் மணிமேகலை.

''உன் தமையனிடம் பேசிய பிறகு அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு விட்டேன், தங்காய்! பழுவேட்டரையர் உயிரோடு இருந்தாலும், இல்லாவிட்டாலும் நான் இனி இங்கே தங்க முடியாது. இந்த வீரரும் இனி இங்கே இருப்பது அபாயந்தான். ஐயா! தாங்கள் உடனே இங்கிருந்து கிளம்பிச் செல்லுங்கள். தங்கள் உயிரின்மேல் தங்களுக்கு ஆசை இல்லா விட்டாலும், இந்தப் பெண்ணை உத்தேசித்தாவது உடனே போய் விடுங்கள்!'' என்றாள் நந்தினி.

''அக்கா! இவர் போகிறதாயிருந்தால், என்னையும் கூட அழைத்துப் போகச் சொல்லுங்கள். நீங்களும் இவரும் போன பிறகு இந்த அரண்மனைச் சிறையில் அடைந்து கிடக்க என்னால் முடியாது!'' என்றாள் மணிமேகலை.

''இளவரசி! பழுவூர் ராணியின் கருத்தைத் தாங்கள் அறிந்து கொள்ளவில்லை. நான் இங்கிருந்து போய்விட்டால், தாங்கள் ஆதித்த கரிகாலரை மணந்து, சாம்ராஜ்யத்தின் பட்டமகிஷியாக விளங்கலாம் என்று சொல்கிறார்கள்!'' என்றான் வல்லவரையன்.

''இல்லை, நான் அவ்விதம் சொல்லவில்லை. ஆதித்த கரிகாலரை மணக்கும் துர்ப்பாக்கியம் எந்தப் பெண்ணுக்கும் ஏற்படுவதை நான் விரும்ப மாட்டேன். அதிலும், என் உயிருக்குயிராகிவிட்ட மணிமேகலைக்கு அந்தக் கதி நேர வேண்டுமா? ஐயா! தாங்கள் வேண்டுமென்று என் கருத்தைத் திரித்துக் கூறுகிறீர்கள். தாங்கள் இப்போது தப்பித்துச் சென்றால், பிறிதொரு காலத்

தில் இந்தப் பெண்ணைக் கைப்பிடித்து மணந்துகொள்ளும் பாக்கியத்தைப் பெறக் கூடும்! மணிமேகலை! உனக்கு இவர் மீதுள்ள அன்பு உண்மையான அன்பு என்றால், உடனே இவரை இங்கிருந்து போகச் சொல்லு!'' என்றாள் நந்தினி.

''ராணி! நான் போகச் சித்தமாயிருக்கிறேன். தங்களிடம் உள்ள ஒரு பொருளை யாசிக்கிறேன். அதைக் கொடுத்தால், உடனே போய் விடுகிறேன்!'' என்றான் வந்தியத் தேவன்.

''ஐயா! என்னிடம் தாங்கள் கோரிப் பெறக் கூடிய அத்தகைய பொருள் என்ன இருக்கிறது? சொல்லுங்கள்!''

''மீன் அடையாளம் பொறித்த வாள் ஒன்று தங்களிடம் இருக்கிறது. அதைக் கொடுத்தால்போய்விடுகிறேன்.என்னுடைய வாளைக் கொள்ளிடத்து வெள்ளத்தில் விட்டு விட்டேன் என்பதுதான் தங்களுக்குத் தெரியுமே?'' என்றான் வந்தியத் தேவன்.

''ஐயா! வேட்டை மண்டபத்தில் எத்தனையோ வாள்களும் வேல்களும் இருக்கின்றன. வேண்டியவற்றை எடுத்துக் கொண்டு தாங்கள் இந்தக் கணமே புறப்படலாமே? பெண்பாலாகிய நான் என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வைத்திருக்கும் அந்த ஒரே ஆயுதத்தை ஏன் கேட்க வேண்டும்?''

''தேவி! தங்களுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்ள மட்டுந்தானா அந்த வாளை வைத்துப் பூஜை செய்து வருகிறீர்கள்? உண்மையைச் சொல்லுங்கள்!''

''என் உயிருக்கும் மேலான கற்பைக் காப்பாற்றிக் கொள்ளவும்தான் அந்தக் கத்தியை வைத்திருக்கிறேன்.''

''தேவி! வேறு நோக்கம் ஒன்றுமில்லையா?''

''வேறு நோக்கம் எனக்கு என்ன இருக்கக் கூடும்?''

''வீர பாண்டியருடைய மரணத்துக்குப் பழிக்குப் பழி வாங்குவதற்காகவும் இருக்கலாம் அல்லவா?''

''மணிமேகலை இருக்கும் போது நீர் அந்தப் பேச்சை எடுக்க மாட்டீர் என்று நினைத்தேன். நானும் இனி மறைக்க வேண்டிய அவசியம் இல்லை. தங்காய்! நீயும் தெரிந்து கொள். நான் இந்தக் கடம்பூர் அரண்மனைக்கு வந்ததன் நோக்கம் என்னவென்று தெரிந்து கொள்!''




வ்வாறு சொல்லியவண்ணம் நந்தினி தேவி பக்கத்தில் கட்டிலின் மீது வைத்திருந்த மீன் அடையாளமிட்ட வாளைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

''சோழ சாம்ராஜ்யத்தின் உட் கலகத்தைத் தீர்த்து வைப்பதற்காக நான் இங்கு வரவில்லை. மதுராந்தகத் தேவருக்கும் ஆதித்த கரிகாலருக்கும் இராஜ்யப் பிரிவினை செய்து வைப்பதற்காகவும் நான் இங்கே வரவில்லை. கடம்பூர் அரண்மனையில் விருந்துண்டு களிப்பதற்காகவும் வரவில்லை! தங்காய்! உனக்குத் திருமணம் முடித்து வைப்பதற்காகவும் வரவில்லை. வீர பாண்டியரின் தலையைக் கொய்த பாதகனைப் பழிக்குப் பழி வாங்கவே வந்தேன். இது பாண்டிய குலத்து வாள்! இதன் மேல் ஆணையிட்டு நான் சபதம் செய்திருக்கிறேன். அந்தச் சபதத்தை முடிக்கவே வந்தேன். இன்றிரவு ஒன்று என் சபதத்தை முடிப்பேன்; அல்லது என் உயிரை முடிப்பேன்!'' என்று நந்தினி ஆவேசம் வந்தவள் போல் பேசி நிறுத்தினாள்.

''அதற்கு நான் தடையாக இருப்பேன் என்றுதானே என்னைப் போகச் சொல்லுகிறீர்கள்? என் உயிருக்கு ஆபத்து வரும் என்று பயமுறுத்தப் பார்க்கிறீர்கள்?'' என்றான் வந்தியத்தேவன்.

''ஆகா! என் பழியை முடிப்பதற்கு நீர் தடை செய்யப் போகிறீரா? நல்ல காரியம்! யார் வேண்டாம் என்றார்கள்? உம்முடைய நண்பரிடம் சென்று இதையெல்லாம் சொல்லி இங்கே அவரை வராமல் தடுத்து விடுவதுதானே?''

''தேவி! அவரிடம் சொல்லித் தடை செய்ய முடியாது என்றுதான் தங்களிடம் வந்தேன். தங்களுடைய காலில் விழுந்து கெஞ்சிக் கேட்டுக் கொண்டாவது தங்களை இந்தப் பாவ காரியம் செய்யாமல் தடுப்பதற்கு வந்தேன்.....''

''ஆகா! பாவ காரியமா? எது பாவ காரியம்? என் தோழியிடம் கேட்டுப் பார்க்கலாம். மணிமேகலை! நீ சொல்! நீ உன் நெஞ்சை ஒருவருக்கு அர்ப்பணம் செய்திருக்கிறாய். அவர் காயம்பட்டு நிராதரவாயிருக்கும் போது அவருடைய பகைவன் அவரைக் கொல்ல வருகிறான். நீ அப்பகைவன் காலில் விழுந்து உன் காதலரைக் கொல்ல வேண்டாமென்று வேண்டிக் கொள்ளுகிறாய். அவன் அப்படியும் கேட்காமல் கொன்று விட்டுப் போகிறான். அப்படிப்பட்ட கிராதகனைப் பழி வாங்குவது பாவம் என்று நீ சொல்லுவாயா, என்

புதிய

# கோத்ரெஜ் லிக்விட்

## “பிசுபிசுப்பு ஓடுது-படக்குனு,



அப்பிடின்னு என்னோட வேலைக்காரி சொல்றாள் எத்தனை மாற்றம். இன்னும் இதை நான் நம்ப முடியலை. கொஞ்ச நாளைக்கு முன்னாலதான் அவள் புகார் பண்ணினாள்: ''பாத்திரமெல்லாம் ஒரே பிசுபிசுப்பு. போட்டு தேயு தேயுனு தேய்க்க வேண்டியிருக்கு.'' மிகச் சிறந்த துலக்கும் பவுடரைக் கொடுத்தாலும்கூட அவள் முணு முணுத்தாள். அவ முணு முணுக்கிற வேகத்தைவிட அதிக வேகமா பவுடரை உபயோகிச்சாள். அதோட, அவள் துலக்கின பாத்திரங்களை மறுபடியும் நான் துலக்க வேண்டியிருந்தது. அவள் செய்த வேலையை நான் திருப்பி செய்யறதுக்கு அவளுக்கு சம்பளம் கொடுக்க வேண்டியிருந்தது. பணம் என்ன மரத்திலேயா காய்க்குது.

அப்புறம்தான் புதிய கோத்ரெஜ் லிக்விட் கிளீனர் வாங்கியாந்தேன். எப்பிடி மூடியின் பாதியளவு பவுடரை தண்ணீரிலே கலக்கிறதுன்னு அவளுக்கு சொல்லிக் கொடுத்தேன். தட்டுகளை தண்ணீரிலே அமிழ்த்தி கழுவுறதையும் சொல்லிக் கொடுத்தேன். அவள் எப்போதும்போல், 'அதெல்லாம் ஒண்ணும் சரிவராதுன்னு' முணங்கினாள் முதல்நாள் ராத்திரி சமைச்ச வாணலியிலிருந்த கனமான பிசுக்கை நான் அகற்றியதை பார்த்தபோதுதான், அவள் உணர ஆரம்பித்தாள். அதிலிருந்து ஒத்துழைக்க ஆரம்பிச்சா. நீங்க வீணாக்கிற பவுடர்களைப்போல் கோத்ரெஜ் பவுடரை வீணாக்கத் தேவையில்லை. அவள் அதை உபயோகிப்பதற்கான குறிப்புகளை பின்பற்றினாள். அதாவது மூடியில் பாதியளவு பவுடரை மட்டுமே உபயோகித்தாள்.

பாத்திரங்களை துலக்கி மகிழ்ந்தாள். இனி அவளைத் திட்டவேண்டிய அவசியமே

# கிளீனர்

## நீண்டநாள் வருது-பளிச்சினு"



இல்லை. இதற்கு முன்னாலே உபயோகிச்ச பவுடரைவிட அதிக நாளைக்கு வருவது கோத்ரெஜ் லிக்விட் கிளீனர். பாத்திரங்களை பளிச்சினு சுத்தமாக்குறதுக்காக அவள் செய்த வேலையை நான் திருப்பிச் செய்ய வேண்டியதில்லை. புதிய கோத்ரெஜ் லிக்விட் கிளீனர். இதைப்போல் இதற்கு முன் அவள் பார்த்ததே இல்லை; சொல்லப்போனால் நான் கூடத்தான்.




இலவசம்
ஒரு ஒப்பற்ற பாத்திரம் துலக்கி - இவ்வித பேக் வாங்கும்போது.

CLARION/B/GS/71/247 TML

கண்ணே!''

''ஒரு நாளும் சொல்ல மாட்டேன், அக்கா! ஆனால் உங்களைப் போல் நான் அவன் காலில் விழுந்து கெஞ்சியிருக்கவும்மாட்டேன். நானே கத்தி எடுத்து அவனை முன்னாலேயே கொன்றிருப்பேன்!'' என்று சொன்னாள் மணிமேகலை.

வந்தியத்தேவன் மணிமேகலையை நோக்கி, ''இளவரசி! அந்தப் பகைவன் ஒருவேளை தங்களுடைய சொந்தச் சகோதரன் என்று ஏற்பட்டு விட்டால்?.....'' என்று கேட்டான்.

''சகோதரனாயிருந்தாலும், யாராயிருந்தாலும் எனக்கு ஒன்றுதான்!'' என்றாள் மணிமேகலை.

''அப்படிச் சொல்லடி, என் கண்ணே!'' என்றாள் நந்தினி.

''இளவரசி தாம் சொல்லுவது இன்னதென்று யோசியாமல் சொல்லுகிறார். இவருடைய தமையன் கந்தமாறன் என்னதான் இவருக்கு விரோதமாகக் காரியம் செய்தாலும், அவனைக் கொல்ல இவருக்கு மனம் வருமா?'' என்று வல்லவரையன் கேட்டான்.

நந்தினியும் மணிமேகலையும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.





ன்னர் நந்தினி வந்தியத்தேவனைப் பார்த்து, ''இது என்ன வீண் கேள்வி? நான் என் கூடப் பிறந்த சகோதரனைக் கொல்லப் போவதில்லை. முதன் முதலில் நீர் என்னைச் சந்தித்தபோது என் தமையன் திருமலையின் பெயரைச் சொன்னீர். அதனாலேதான் உம்மிடம் எனக்கு அபிமானம் உண்டாயிற்று. ஆழ்வார்க்கடியானுடைய நண்பர் என்பதற்காகவே நீர் பலமுறை அபாயத்திலிருந்து தப்பிச் செல்வதற்கு உதவி செய்தேன். ஐயா! இன்று நான் என் சபதத்தை முடிக்காமல் என் உயிரை விடும்படி நேர்ந்தால், திருமலையிடம் என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டதாகத் தெரிவிக்க வேண்டும். அவனுடைய சொற்படி நான் நடக்கா விட்டாலும், அவனை அடியோடு மறந்து விடவில்லை என்பதாகச் சொல்ல வேண்டும்!'' என்றாள்.

''அம்மணி! இந்தக் கபட நாடகம் இன்னும் ஏன்? ஆழ்வார்க்கடியான் தங்கள் தமையன் அல்ல; தாங்கள் அந்த வீர வைஷ்ணவனுடைய சகோதரியும் அல்ல....''

''பின் யார் என் தமையன்? யாருடைய சகோதரி நான்?''

''தங்கள் தமையனார் ஆதித்த கரிகாலர்தான். ஆகையினாலேயே தாங்கள் சகோதரஹத்தி தோஷத்துக்கு ஆளாக வேண்டாம் என்று வேண்டிக் கொள்கிறேன். வீரபாண்டிய குலத்துக் கொலை வாளைத் தயவு கூர்ந்து என்னிடம் கொடுத்து விடும்படி மன்றாடுகிறேன்!''

''கரிகாலரும் நானும் உடன் பிறந்தவர்கள் என்ற அபூர்வ கற்பனையைத் தாங்கள் இளவரசரிடம் சொல்லியிருக்கிறீர்கள் அல்லவா? அதை அவர் நம்பினாரா?'' என்று நந்தினி ஏளனப் புன்னகையுடன் கேட்டாள்.

''நம்பியதாகத்தான் தோன்றியது. ஆனால் அவர் மனத்தில் உள்ளதை நான் ஒன்றும் அறியேன்....''

''அவர் மனத்தில் உள்ளதை நான் அறிவேன். அந்தப் பழையாறை மோகினியின் கற்பனா சக்தியைப் பற்றி அவர் பெரிதும் வியக்கிறார்.....''

''அம்மணி! நான் கூறியது கற்பனையல்ல. பழையாறை இளையபிராட்டியின் கற்பனை அல்லவே அல்ல. ஈழ நாட்டில்



நான் என் கண்ணால் பார்த்தேன்....''

''என்னத்தைப் பார்த்தீர்?''

''வாயினால் பேசும் சக்தி அற்ற ஒரு பெண் தெய்வத்தைப் பார்த்தேன். என்னையும் ஆழ்வார்க்கடியானையும் அருள்மொழிவர்மரையும் அந்தத் தெய்வமகள் பேரபாயத்திலிருந்து காப்பாற்றினார். அநுராதபுரத்தின் வீதிகளில் நள்ளிரவில் நாங்கள் ஒரு பழையமாளிகையின் ஓரமாகப்போய்க் கொண்டிருந்த போது அவர் வீதியின் எதிர்ப்பக்கத்தில் நின்று எங்களைச் சமிக்ஞையினால் அழைத்தார். அருள்மொழிவர்மரும் நாங்களும் அவரை நோக்கி நகர்ந்ததும் நாங்கள் சற்று முன் நின்றிருந்த வீட்டின் முகப்பு இடிந்து விழுந்தது. பொன்னியின் செல்வர் அந்தப் பெண்ணரசியைத் தம் குல தெய்வம் என்று போற்றி வணங்கினார்....''

''ஐயா! இந்தக் கதைக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? அருள்மொழிவர்மரைச் சோழ சிங்காதனத்தில் அமர்த்த விரும்பும் இளையபிராட்டியிடம் இதையெல்லாம் நீங்கள் கூறியிருக்கலாம்; அவளும் வியந்து மகிழ்ந்திருப்பாள். என்னிடம் ஏன் சொல்கிறீர்?....''

''அதற்குக் காரணம் இருக்கிறது. அநுராதபுரத்து வீதிகளில் மங்கலான நிலவு வெளிச்சத்தில் அந்தப் பெண்ணரசியை நான் சற்றுத் தூரத்திலிருந்து பார்த்த போது, 'தஞ்சாவூரில் நாம் விட்டுப் பிரிந்து வந்த பழுவூர் இளையராணி இங்கே எப்படி வந்து சேர்ந்தார்?' என்று வியப்படைந்தேன். அம்மணி! தங்களுக்கும் அவருக்கும் உருவத் தோற்றத்தில் அணுவளவும் வித்தியாசம் இல்லை. தங்கள் ஆபரண அலங்காரங்களை நீக்கி விட்டுக் கூந்தலைப் பிரித்துப் போட்டுக் கொண்டால் தத்ரூபமாக அவரைப் போலவே இருப்பீர்கள்....''

''நீர் சொல்லுவதை நான் ஏன் நம்ப வேண்டும்? தாங்கள் கற்பனா சக்தி அதிகமுடையவர் என்பதை நான் அறிவேன். இதுவும் ஏன் உமது அபூர்வ கற்பனைகளில் ஒன்றாயிருக்கக் கூடாது?''

''தேவி! சத்தியமாகச் சொல்கிறேன்.''

''நீர் எவ்வளவுதான் ஆணையிட்டுச் சொன்னாலும் என்னால் நம்ப முடியாது!''

''ராணி! 'நம்ப முடியாது' என்று தாங்கள் சொல்வது பொய்! நான் சொல்வது உண்மை என்பது தங்களுக்கே தெரியும். நாங்கள் தெரிந்து கொள்வதற்கு முன்பே தங்களுக்குத் தெரியும். அந்த உண்மையைத் தங்கள் காரியத்துக்கு உபயோகப்படுத்திக் கொண்டுமிருக்கிறீர்கள். முதன் முதலில் தங்களைத் தஞ்சை அரண்மனையில் நான் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த போது இந்த மந்திரவாதி ஆந்தையைப் போல் கத்திக் கொண்டு வந்தான். என்னை அப்பால் போய் இருக்கச் சொன்னீர்கள். தற்செயலாகத் திறந்திருந்த பொக்கிஷ நிலவறைக்குள் நான் போய் ஒளிந்து கொண்டிருந்தேன். அப்போது சில விந்தையான காட்சிகளை நான் பார்க்கும்படி நேர்ந்தது...''

''ஆகா! அவை என்ன அபூர்வக் காட்சிகள்?''

''கந்தமாறன் மதுராந்தகத் தேவரோடு அந்த நிலவறைப் பாதை வழியாகப் போவதைப் பார்த்தேன்...''

''அதனால் என்ன?''

''சிறிது நேரத்துக்கெல்லாம் அதே நிலவறையில் தாங்களும் பெரிய பழுவேட்டரையரும் போவதைப் பார்த்தேன். அப்போது நீங்கள் எங்கே போகிறீர்கள் என்பது தெரிந்திருக்கவில்லை. பிறகுதான் ஊகித்துத் தெரிந்து கொண்டேன். தங்கள் அன்னையின் ஆவி வடிவத்தைப் போல் நடித்துச் சக்கரவர்த்தியைத் துன்புறுத்துவதற்காகப் போகிறீர்கள் என்று தெரிந்து கொண்டேன்.....''



த்தனை நேரம் திடமாக நின்று பேசிக் கொண்டிருந்த நந்தினி இப்போது திடீரென்று சோர்வடைந்து அங்கே கிடந்த ஆசனம் ஒன்றில் அமர்ந்தாள்.

''ஐயா! இன்னும் என்ன தெரிந்து கொண்டீர்கள்?''

"தாங்களும் பெரிய பழுவேட்டரையரும் நிலவறைப் பாதையில் போய்க் கொண்டிருந்த போது, மதுராந்தகரை அழைத்துச் சென்ற கந்தமாறன் திரும்பி வந்து கொண்டிருந்தான். பழுவேட்டரையரிடம் அவன் ஏதோ கூறினான். அவர் அவனுடன் தீவர்த்தி பிடித்துக் கொண்டு வந்த காவலனிடம் ஒரு சமிக்ஞை செய்தார்...."

"அது என்ன சமிக்ஞை?"

"தங்களுக்கு அது தெரிந்தேயிருக்க வேண்டும். கந்தமாறனை முதுகில் குத்திக் கொன்று விடும்படி பழுவேட்டரையர் கட்டளையிட்டார். அதை நான் தடுத்துக் கந்தமாறன் உயிரைக் காப்பாற்றினேன். அதன் பயனாக, அவனுடைய முதுகில் கத்தியால் குத்திய பழி என் பேரில் விழுந்தது...."

நந்தினி மணிமேகலையைத் திரும்பிப் பார்த்து விட்டு, "ஐயா! ஏதேதோ சொல்லி இந்தப் பெண்ணின் மனத்தை ஏன் கலக்குகிறீர்கள்?" என்றாள்.

"தேவி! இத்தனை காலமும் இதையெல்லாம் பற்றி நான் யாரிடமும் சொல்லவில்லை. உங்கள் கையில் வைத்திருக்கும் வாளை என்னிடம் தாங்கள் கொடுத்து விட்டால், இனியும் யாரிடமும் சொல்லவில்லை...."

"வாளைக் கொடுக்க முடியாது, ஐயா! எதற்காகக் கொடுக்க வேண்டும்? யாரிடம் வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். இன்னும் ஏதாவது கற்பனை சேர்த்து வேணுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். ஏன்? இப்போதே கரிகாலரிடம் சென்று, அவர் இங்கு வருவதை நிறுத்தி விடுங்கள்! என்னை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்? போங்கள்!" என்று நந்தினி கூறிய போது, அவளுடைய கண்களில் நீர் ததும்பியது.

"அம்மணி! இளவரசருடைய சுபாவம் எனக்கு நன்றாய்த் தெரியும். அவரைத் தடுக்க என்னால் முடியாது. தடுக்க முயன்றால் அவருடைய பிடிவாதம் அதிகமாகும். ஆகையினால்தான் தங்களை வேண்டிக் கொள்ள வந்தேன்......"

"என்னை வேண்டிக் கொள்ள உமக்கு என்ன உரிமை? நீர் கூறியதெல்லாம் உண்மையாகவே இருக்கட்டும். ஈழ நாட்டில் என்னைப் பெற்றெடுத்த அன்னையை நீர் பார்த்ததாகவே இருக்கட்டும். அதற்காக நான் ஏன் என் சபதத்தைக் கைவிட வேண்டும்? என் அன்னைக்குச் சக்கரவர்த்தி பெரிய துரோகம் செய்திருக்கிறார். அவர் மேலும் அவருடைய மக்கள் மேலும் நான் ஏன் இரக்கம் காட்ட வேண்டும்? பழி வாங்குவதற்கு வேண்டிய காரணம் இன்னும் அதிகமல்லவோ ஆகிறது?"

"இல்லை, அரசி! இல்லை! தங்களுடைய பழிவாங்கும் எண்ணத்தைத் தங்கள் அன்னை சரியென்று ஒப்புக் கொள்வாரா என்று யோசித்துப் பாருங்கள். சக்கரவர்த்தியின் மக்களை அந்த மூதாட்டி தம் உயிருக்கு உயிராகக் கருதியிருக்கிறார். அவர்களில் ஒருவரைத் தாங்கள் தங்கள் கையினால் கொல்லுவதை அவர் விரும்புவாரா என்று யோசித்துப் பாருங்கள்? ஒருநாளும் விரும்ப மாட்டார். தங்களுடைய செயலை அறிந்தால் அவர் தங்களை வெறுப்பார். அவர் உயிரோடிருக்கும் வரையில் தங்களைச் சபித்துக் கொண்டிருப்பார். இறந்த பிறகு கூட, ஆவி வடிவத்திலே வந்து தங்களைச் சுற்றி வருத்திக் கொண்டிருப்பார். வாயினால் அவர் பேச முடியாது. ஆனால் அவருடைய கண் பார்வையே தங்களை என்றென்றைக்கும் நரகத்திலும் கொடிய வேதனையில் ஆழ்த்திக் கொண்டிருக்கும்...."

நந்தினியின் கண்களில் இப்போது கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது. கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மேல் நோக்காகப் பார்த்தாள். அங்கு ஏதோ துயரமயமான காட்சியைப் பார்த்தவள் போல் அவள் முகம் வேதனை அடைந்து காட்டியது. "அம்மா! அம்மா! வீர பாண்டியருடைய தலையும் உடலும் தனித்தனியே வந்து என் பிராணனை வதைத்து எடுப்பது போதாதா? நீ வேறே வந்து என்னைச் சுற்ற வேண்டுமா?" என்று சொல்லிக் கொண்டே, அந்தக் காட்சியைப் பார்க்கச் சகிக்காதவள் போல் கண்களைக் கையினால் மூடிக் கொண்டாள். சிறிது நேரம் அந்த அறையில் நந்தினியின் விம்மல் சத்தம் மட்டுமே கேட்டது.

மணிமேகலை வந்தியத்தேவனைப் பார்த்து, "ஐயா! தாங்கள் இவ்வளவு குரூரமானவர் என்று எனக்குத் தெரியாமல் போயிற்று!" என்றாள்.

இதைக் கேட்ட நந்தினி உடனே தன் கண்களைப் பொத்தியிருந்த கரங்களை எடுத்து விட்டு, "அவர் பேரில் குற்றம் ஒன்றுமில்லை, தங்காய்! என்னுடைய நன்மைக்காகத்தான் சொல்கிறார். என்னைப் பெரும் பாதகத்திலிருந்து காப்பாற்றுவதற்காகத்தான் சொல்லுகிறார்! ஆனாலும் அது என்னை இப்படித் துன்புறுத்துகிறது!" என்றாள்.

பின்னர், கண்ணீர் ததும்பிய கண்களினால் வந்தியத்தேவனை நோக்கி, "ஐயா! இதுவரையில் யாரும் சாதிக்க முடியாத காரியத்தை நீர் சாதித்து விட்டீர். என்னுடைய இரும்பு நெஞ்சையும் இளகச் செய்து



## அருள்வாக்கு

ஆத்மலாபத்துக்கு உதவாத விஷயம் என்பதால்தான் சொந்தப் பணிகளைப் பற்றி நான் சொல்வதில்லை. உபதேசம் செய்கிற எவருமே சொல்வதில்லை. சொல்லாமலே அவனவனும் இவைகளைச் செய்து கொண்டுதானிருக்கிறான். லோகமெல்லாம் நன்றாயிருக்கணும் என்று பிரார்த்திக்க வேண்டுமென்றுதான் யாரும் உபதேசிப்பார்களே தவிர, 'நான் நன்றாயிருக்கணும்; என் மனுஷ்யாள் நன்றாயிருக்கணும்' என்று பிரார்த்தித்துக் கொள்ளும்படி சொல்வதில்லையே! யாரும் சொல்லிக் கொடுக்காமல் அவனவனும் தானாகவே இப்படி தன் நலத்தை, தன் குடும்ப நலத்தைப் பிரார்த்தித்தபடிதான் இருக்கிறான். அந்த நலம் ஆத்மாவைப் பொறுத்ததாயிருந்தால் இப்படிப்பட்ட பிரார்த்தனை நியாயமானதுதான். லௌகிகமாகவும் ஜீவனத்துக்கு அவசியமான அளவுக்கு மட்டும் வேண்டிக் கொண்டால் தப்பில்லைதான். ஆனால் எல்லாரும் இந்த லௌகிக 'நலம்' என்பதையே ஆத்மாவுக்கு ஹானி உண்டாக்குகிற அளவுக்குப் பிரார்த்திக்கிறார்கள். பிரார்த்திப்பதோடு அதற்கான முயற்சிகளை ஓயாமல் பண்ணியபடி இருக்கிறார்கள். இதிலேயே ஓவராக ஈடுபட்டு, பாசத்தினால் தர்மா தர்மங்களைக் கூட மறந்து, தப்பு வழியில் போயும் இம்மாதிரி லௌகிக அபிவிருத்தியிலேயேதான் அநேகமாக எல்லாரும் கண்ணாயிருக்கிறார்கள். இதனாலேயே பரோபகாரத்துக்குப் பொழுதோ, மனஸோ, த்ரவ்யமோ எதுவும் கொடுக்காதவர்களாகவும் இருக்கிறார்கள். ஆனதால் இப்படிப்பட்டவர்களை "சொந்த விஷயங்களையே கவனித்துக் கொண்டிருந்தால் போதாது. இப்படிப்பட்ட ஆசைகளை, தேவைகளைக் குறைத்துக் கொண்டு, அதனால் லௌகிக உழலையும் குறைத்துக் கொண்டு, கொஞ்சமாவது ஆத்மாவைக் கவனித்துக் கொள்ளுங்கள்; அதற்கு வழியாக,ஓர் அங்கமாக ஸமூஹத்தை, லோகத்தைக் கவனித்துத் தொண்டு செய்யுங்கள்" என்றே சொல்லும்படியிருக்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

விட்டீர். இதோ உமது விருப்பத்தின்படி இந்த வாளை உம்மிடமே கொடுத்து விடுகிறேன். பெற்றுக் கொள்ளும்!" என்று வாளை நீட்டினாள்.

வந்தியத்தேவன் அதைப் பெற்றுக் கொள்ளக் கையை நீட்டிய போது நந்தினி மறுபடியும் பின்வாங்கினாள்:—

"கொஞ்சம், பொறுங்கள்! வாளை எடுத்துக் கொள்வதற்கு முன் எனக்கு ஓர் உதவி செய்ய முடியுமா என்று சொல்லுங்கள். என் சபதத்தை நிறைவேற்றாமல் நான் இங்கிருந்து கிளம்பினால் வேட்டை மண்டபத்தில் உள்ளவர்கள் என்னைச் சும்மா விட மாட்டார்கள். உயிரோடு சிதையில் வைத்து நெருப்பு மூட்டிக் கொளுத்தி விடுவார்கள். அதற்குக் கூட நான் அஞ்சவில்லை. ஆனால் நான் சாவதற்கு முன்னால் என் தாயை ஒரு முறை சந்திக்க விரும்புகிறேன்... வாணர்குல வீரரே! நீர் கூறியதையெல்லாம் நான் நம்பவில்லையென்று சொன்னேன். அது தவறு! ஈழநாட்டுக் காடுகளில் தலைவிரி கோலமாகத் திரிந்து கொண்டிருக்கும் என் அன்னையைப் பற்றி நீர் சொல்லியதையெல்லாம் நான் நம்புகிறேன். ஒவ்வொரு வார்த்தையையும் நம்புகிறேன். நானே அவரைப் பார்த்ததும் உண்டு...."

"எப்போது? எப்படி?" என்று கேட்டான் வந்தியத்தேவன்.

"குழந்தைப் பிராயத்தில் நான் படுத்துத் தூங்கும் போது சில சமயம் திடுக்கிட்டுக் கண் விழித்துக் கொள்வேன். அப்போது ஒரு பெண்ணுருவம் என் முகத்தினருகில் குனிந்து என்னைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கக் காண்பேன். நான் கண் விழித்ததும் அந்த உருவம் மறைந்து விடும். எனக்கு இது அதிசயத்தையும் அச்சத்தையும் அளித்து வந்தது. கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்துக் கொள்வதில் எனக்கு அப்போதிருந்து ஆசை நிரம்ப உண்டு. ஆகையால் என் முகத் தோற்றம் என் மனத்தில் நன்றாகப் பதிந்திருந்தது. நான் தூங்கும் போது என்னைக் குனிந்து உற்றுப் பார்த்த உருவம் என்னைப் போலவே இருப்பது பற்றி வியந்திருக்கிறேன். என் முகமும் என்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த உருவத்தின் முகமும் ஒரே மாதிரி இருக்கும். கூடு விட்டுக் கூடு பாய்வது பற்றிய கதைகளை நான் கேட்டிருந்தேன். என் உயிரே என் உடம்பை விட்டுப் பிரிந்து தனியாக மேலே நின்று என் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறதோ என்று சந்தேகப்படுவேன். சில சமயம், நான் இறந்து போய் விட்டேனோ, படுத்திருப்பது என் உயிரற்ற உடம்போ என்று எண்ணித் திடுக்குறுவேன். இதெல்லாம் உண்மையாக நடப்பதா, கனவில் நடப்பதா, அல்லது என் மனப்

பிரமையா, எனக்குச் சித்தக் கோளாறு ஏற்பட்டு விட்டதா என்றெல்லாம் எண்ணி வேதனைப்படுவேன். எனக்குப் பிராயம் வந்த பிறகு, அப்படி நான் கண்டதெல்லாம் உண்மையான தோற்றமேதான் என்று பல காரணங்களினால் எனக்கு நிச்சயமாயிற்று. முக்கியமாக, சுந்தர சோழர் என்னைப் பார்த்து அடைந்த குழப்பத்தைக் கவனித்து அந்த நிச்சயம் அடைந்தேன். வேறு பல அறிகுறிகளினாலும், ஆழ்வார்க்கடியான் சில சமயம் தவறிக் கூறிய வார்த்தைகளினாலும், என்னைப் போன்ற உருவம் படைத்த என் அன்னை ஒருத்தி இருக்க வேண்டும் என்று நிச்சயம் அடைந்தேன். அவரை ஒரு தடவை பார்க்க வேண்டும், அவருடைய மடியிலே படுத்து விம்மி அழ வேண்டும் என்று என் உள்ளத்தில் தாபம் குடிகொண்டது. ஐயா! இன்று தாங்கள் கூறிய வார்த்தைகளினால் அந்தத் தாபம் பன்மடங்கு அதிகமாகி விட்டது. என்னை என் தாயாரிடம் நீர் அழைத்துப் போவதாயிருந்தால், என் பழிவாங்கும் நோக்கத்தை விட்டு விடுகிறேன்! இந்தப் பாண்டிய குலத்து வாளை உம்மிடம் இப்போதே கொடுத்து விடுகிறேன்!'' என்று விம்மிக் கொண்டே கூறினாள் நந்தினி.

வந்தியத்தேவன் சிந்தனையில் ஆழ்ந்தான். ''இது என்ன வம்பு? கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டு விட்டதே?'' என்று எண்ணினான்.

மணிமேகலை ''ஐயா! நானும் தங்களை வேண்டிக் கொள்கிறேன். அக்காவின் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பதாக வாக்குக் கொடுங்கள்'' என்றாள்.

வந்தியத் தேவன் மிக்க தயக்கத்துடன், ''என்னால் முடிந்தால் பார்க்கிறேன்!'' என்று சொன்னான்.

''அப்படியானால், உடனே நாம் கிளம்ப வேண்டும். ஆதித்த கரிகாலர் இங்கு வருவதற்குள் கிளம்பி விடவேண்டும். இங்கிருந்து எப்படிப் புறப்பட்டுச் செல்வது? வாசல் வழி அபாயகரமானது. எதிரே கந்தமாறனும் கரிகாலனும் வந்தாலும் வருவார்கள்!'' என்றாள் நந்தினி.

''வேட்டை மண்டபத்துக்குள்ளிருக்கும் சுரங்கப் பாதை வழியாக அழைத்துப் போகிறேன், வாருங்கள்!'' என்றான் வந்தியத் தேவன்.

''அக்கா! நானும் வந்து விடுகிறேன். என்னையும் அழைத்துப் போங்கள்!'' என்றாள் மணிமேகலை.

நந்தினி அதைக் கவனிக்காமலே, ''வேட்டை மண்டபத்துக்குள் போக நான் விரும்பவில்லை. ரவிதாஸனும் அவனுடைய ஆட்களும் நம்மை உயிரோடு விட மாட்டார்கள்.....'' என்றாள்.

''அம்மணி! தங்கள் கையில் உள்ள வாளை மட்டும் என்னிடம் கொடுங்கள். அவர்கள் நாலு பேரையும் நான் சமாளித்துக் கொள்கிறேன்!'' என்றான் வந்தியத் தேவன்.

''வேண்டாம்! அதனால் பல சங்கடங்கள் உண்டாகும். மணிமேகலை! இங்கிருந்து வெளியேறுவதற்கு வேறு வழி ஒன்றும் இல்லையா?'' என்று கேட்டாள் நந்தினி தேவி.



ணிமேகலை புருவத்தை நெறித்துக் கொண்டு சிறிது யோசித்தாள். ''அக்கா! எனக்கு வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் இவரையே கேளுங்கள். முன்னொரு சமயம் இவர் இந்த அறையிலிருந்து மாயமாக மறைந்து போனார். எப்படிப் போனார் என்று கேளுங்கள்!'' என்றாள்.

நந்தினி வந்தியத் தேவன் முகத்தைப் பார்த்தாள்.

வந்தியத் தேவன், ''ஆம், அம்மணி! வேறு ஒரு வழி இருக்கிறது. தற்செயலாக அதை நான் கண்டு பிடித்தேன். ஆனால் அதன் வழியாகப் போவது எளிதன்று. மச்சுக்கு மச்சு, மாடத்துக்கு மாடம் தாவிக் குதிக்க வேண்டும். அப்புறம் மதில் ஏறியும் குதிக்க வேண்டும். தங்களால் முடியுமா என்று சந்தேகிக்கிறேன். அதைக் காட்டிலும் மந்திர வாதியையும் அவனுடைய ஆட்களையும் ஒரு கை பார்த்து விட்டுச் சுரங்கவழி போவது எளிது!'' என்று சொன்னான் வந்தியத் தேவன்.

அப்போது மணிமேகலை, ''ஐயோ அவர்கள் வருகிறார்கள் போலிருக்கிறதே!'' என்று திடுக்கிட்டுக் கூறினாள்.

இருவரும் உற்றுக் கேட்டார்கள்.

ஆம்; அப்போது அரண்மனை முன் கட்டிலிருந்து அந்த அறைக்குள் யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டது.

''ஐயா! சீக்கிரம் வேட்டை மண்டபத்துக்குள் போய் விடுங்கள்!'' என்றாள் நந்தினி தேவி.

''மறைந்து கொள்ள எனக்கு வேறு ஒரு நல்ல இடம் இருக்கிறது. தேவி! அந்த வாளை இப்படிக் கொடுங்கள்!'' என்றான் வந்தியத் தேவன்.

நந்தினி அவனிடம் வாளைக் கொடுப்பதற்காக அதை முன்னால் நீட்டினாள். அப்போது அவளுடைய கைதவறி, வாள் தரையில் விழுந்து, ஜண ஜண கண கண வென்னும் ஒலியை எழுப்பியது.

(தொடரும்)

# மானிடச் சாதி

“ஜெஸா”

**வா**டகை வீட்டில் குடியிருந்த போது கூட எனக்கு இவ்வளவு வருத்தம் தெரிய வில்லை. வாயைக் கட்டி, வயிற்றைக் கட்டி சிறுகச் சிறுகச் சேர்த்த பணத்தில் புறநகர்ப் பகுதியில் இருந்த ‘அலமேலு நகரில்’ ஒரு வீட்டை வாங்கி நான் கால் வைத்த வேளை, என் நிம்மதி காணாமல் போனது.

காரணம்... வேறொன்றுமில்லை. ஒரு குப்பைத் தொட்டி! சாதாரணக் குப்பைத் தொட்டி! சிதிலமான அந்த சிமெண்ட் பைப் சதா என் சிந்தனையைக் குடைந்து, மனசைச் சிதறடித்துக் கொண்டிருந்தது.

அலமேலு நகருக்குக் குடிவந்து சரியாக நாற்பத்தாறாவது மணி நேரம். என் தர்ம பத்தினி வாசலில் இருந்து அபயக்குரல் கொடுக்கவும், நான் தூக்கம் விலகாத கண்களோடு வெளியே வந்தேன்.

கோலப் பொடி டப்பாவுடன் கோபமாக நின்றிருந்தவள், ‘‘பார்த்தீங்களா இந்த அநியாயத்தை?’’ என்று மெதுவாகத்தான் கேட்டாள். அதற்குள் பக்கத்து வீட்டு ராவ் எச்சில் துப்பும் சாக்கில் நிதானமாக எட்டிப் பார்த்தார். எனக்கு எரிச்சலாய் இருந்தது.

‘‘என்ன ஜானு! காலங்காத்தால கத்திக்கிட்டு....?’’

‘‘நல்லாப் பாருங்கோ. நமக்குக் கோலம் போட இடம் இருக்கா! இப்பத்தான் கூட்டிட்டுப் போனேன். அதுக்குள்ளே அடுத்த வீட்டிலே இருந்து குப்பைகள் வந்து இறைஞ்சு கிடக்கு...’’

‘‘விடு ஜானு! அவங்ககிட்டே நிதானமாச் சொல்லிக்கலாம். இந்தக் குப்பைகள் எல்லாம் காத்திலே பறந்து வந்திருக்கும். கூட்டி எடுத்து, அதோ அந்தக் குப்பைத் தொட்டியில போட்டுடேன்...’’

‘‘அதை அவங்களே செஞ்சிருக்கலாமே... எதுக்கு இப்படி ஒதுக்கி வைக்கணும்? ஒதுக்கி வச்சா, காத்து வாரிக்கிட்டுத்தான் வரும்.’’

ஜானு முணுமுணுத்தபடி கூட்ட ஆரம்பிக்கவும், நான் குப்பை எடுக்கும் தகர முறத்தைக் கொண்டு வந்தேன். முறத்தை நிரப்பி என்னிடம் நீட்டிய ஜானு, ‘‘நீங்களே இதைக் குப்பைத் தொட்டியிலே போட்டுட்டு வந்துடுங்களேன்,’’ என்று கொஞ்சலாகக் கெஞ்சவும், மனைவியின் அதிகாலைக் கொஞ்சலில் கரைந்து போன அத்யந்தக் கணவனாய் நானும் முறத்தோடு குப்பைத் தொட்டியை நோக்கி நடந்தேன்.

நான்கு வீடுகள் தள்ளிக் குப்பைத் தொட்டி சர்வ அலங்காரமாய்ப் பளிச்சென்று கான்கிரீட் தூண் போல நின்று கொண்டிருந்தது. சுற்றிலும் படு சுத்தம். பேருக்குக் கூட ஒரு குப்பை இல்லை. எனக்கே ஒரு நிமிடம் யோசனையாகத்தான் இருந்தது. இது



குப்பை போடும் தொட்டியா, இல்லை குளிக்கும் தொட்டியா என்று!

கையில் முறத்தோடு நான் போவதைத் தம் வீட்டு வாசலில் நின்றபடி பார்த்துக் கொண்டிருந்தார் டேனியல். மெலிதாகப் புன்னகை செய்தார் புகை வழியும் உதட்டோடு! மனுஷன் அப்போதாவது தடுத்திருக்கலாம்! அப்புறம் எப்படி அடுத்தவர் தர்மசங்கடத்தைத் தாராளமாகப் பார்த்து ரசிப்பது?

நான் குப்பையைக் கொட்டி விட்டுத் திரும்பவும், டேனியல் சட்டென்று பதற்றம் முகத்தில் படர்ந்து விரிய, "குப்பையை அந்தத் தொட்டிக்குள்ளேயா போட்டீங்க?" என்றார். ஏதோ, "நீங்களா நெருப்பு வச்சீங்க?" என்ற தொனியில்.

எனக்கு உடம்பெல்லாம் எரிந்தது. "குப்பை கொட்டத்தானே அதை வச்சிருக்கு?"

டேனியல் செயற்கைத் தவிப்போடு, "என்ன ஸார் இப்படி செஞ்சிட்டீங்க...? இந்த வீட்டு ஆறுமுகம் சரியான முரடன் ஸார். தெரியும் இல்லே... சாராயக் கடை வச்சிருக்கான்.." என்று கைகளைப் பிசைந்தார்.

"அதுக்கும் நான் குப்பையைக் கொட்டினதுக்கும் என்ன சம்பந்தம்?"

"என்ன ஸார் இப்படி கேட்கறீங்க? இதுலே யாராவது குப்பை கொட்டறாங்களா? நீங்கதான் செஞ்சிருக்கீங்க."

எனக்கு உள்ளுக்குள் கொஞ்சம் உதறலாய் இருந்தாலும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல், "தொட்டின்னு இருந்தாக் கொட்டத்தானே செய்வாங்க," என்று



அலட்சியமாகச் சொல்லி விட்டு நகர்ந்தேன்.

அதோடு எல்லாவற்றையும் மறந்து விட்டு நான் ஆபீஸ் போய் விட்டாலும் என்னால் அரை வினாடி கூட நிம்மதியாக

வேலை பார்க்க முடியவில்லை. அடிக்கடி ஆறுமுகம் ஞாபகத்தில் குதித்து ஆட்டி வைத்தான். அவன் எப்படிப்பட்ட ஆளோ என்னவோ! நான் இல்லாத போது வந்து கலாட்டா செய்தால் ஜானு எப்படி சமாளிப்பாள்?

இனி பொறுக்க முடியாது என்ற நிலையில் பர்மிஷன் போட்டு விட்டு முன்னாலேயே கிளம்பி விட்டேன். வீட்டை நெருங்க நெருங்க வயிற்றைப் புரட்டியது. நான் எதிர் பார்த்ததைப் போலவே, என் வீட்டின் முன்னால் சிறு கூட்டம். ஜானு உள்ளே நின்று மூக்கை உறிஞ்சிக் கொண்டிருந்தாள். என்னைப் பார்த்ததும் வேகமாக ஓடி வந்து, "கேட்டீங்களா, நாம குப்பை கொட்டக் கூடாதாம்!" என்றாள்.

முகமெல்லாம் அம்மைத் தழும்பேறிய, அட்டைக்கரி முகமும், ஆட்டுக்கிடா மீசையுமாக, மோட்டாவான ஓர் ஆள் லுங்கியை மடித்துக் கட்டிக் கொண்டு முன்னால் வந்து ஏற இறங்க என்னைப் பார்த்தான்.

"ஓகோ... நீதான் அந்த ஆளா?"

உருவத்தைப் பார்த்தாலே எதற்கும் துணிந்தவனாகத் தெரிந்தான். எனக்கு லேசாகப் பயம் எட்டிப் பார்க்க, மென்று விழுங்கினேன்.

"ஏதோ புச்சா வந்திருக்கியேன்னு பாக்கறேன்... இல்லேன்னா நடக்கறதே வேறே... உன் ஆட்டுக் குப்பையைக் கொட்ட என் ஆட்டு வாசல்தானா கிடைச்சது?"

"வாசல்லே கொட்டலியே... குப்பைத் தொட்டியிலதானே..."

"இந்த இடத்துல யாராவது அங்கே வந்து குப்பை கொட்டறாங்களா? நீ மட்டும் என்னாய்யா உசத்தி? தொட்டியிலியா கொட்டினே... கண்ணைத் தொறந்து பாரு..."

பார்த்தேன். அதிர்ச்சியால் பதறிப் பின் வாங்கினேன். ஆறுமுகத்தின் வீட்டுக்கு எதிரே இருந்த குப்பைத் தொட்டி, நிரம்பி வழிந்து, சுற்றிலும் குப்பைக் குன்று போல உருவாகி, வீட்டு வாசலில் பாதியைக் கபளீகரம் செய்திருந்தது.

அடப் பாவிகளா, நான் ஒரு முறம் குப்பையைக் கொட்ட ஆரம்பித்து வைக்க, அதையே சாக்காக வைத்து அத்தனை பேரும் அதிலேயே குப்பைகளைக் கொட்டி மூழ்கடித்து விட்டு, இப்போது ஒன்றுமே செய்யாத அப்பாவிகளைப் போல மௌனமாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஆரம்பித்து வைத்த பாவத்துக்கு இதோ நான் ஆறுமுகத்திடம் வாங்கிக் கட்டிக் கொள்கிறேன்!

இந்தப் பிரச்னையை அப்படியே விட்டு விட எனக்கு இஷ்டமில்லை. எல்லோரையும் அங்கேயே இழுத்து வைத்துப் பேசினேன். ஆறுமுகத்தையும் விடவில்லை. நான் எந்தத் தீர்வை எடுத்து வைத்தாலும் யாராவது ஒருவர் அதற்கு முட்டுக்கட்டை போட, பிரச்னை முடியாமலே பொழுது நீண்டது.

கடைசியில் அந்தக் குப்பைத் தொட்டி ஒவ்வொருவர் வீட்டுக்கு முன்பும் வைக்கப் பட வேண்டும் என்றும், நகராட்சியின் குப்பை லாரி வந்து குப்பைகளை வாரிச் சென்ற பிறகு, குப்பைத் தொட்டி அடுத்த வீட்டுக்கு இடம்பெயரும் என்றும் முடிவு செய்யப்பட்டது. இதற்குக் கூட எதிர்ப்புக் கிளம்பி இருக்கும். அதிசயமாக ஆறுமுகம் இதற்கு ஆதரவு தெரிவித்ததால் எல்லோரும் அடங்கி விட்டார்கள்.

அதோடு முடிந்ததா? முதலில் யார் வீட்டுக்கு எதிரே தொட்டி வைப்பது என்று பிரச்னை. ஒரு மணி நேரம் அல்லாடியது. ஒருவர் கூட இந்த முதல் மரியாதைக்கு ஒப்புக் கொள்ளாததால், நானே இதையும் ஆரம்பித்து வைக்க வேண்டிய அவலநிலை ஏற்பட்டது.

இரவோடு இரவாகக் குப்பைத் தொட்டி என் வீட்டுக்கு முன்பாக இடம்பெயரவும், ஜானு எரித்து விடுபவள் போல என்னைப் பார்த்து முகம் திருப்பிக் கொண்டு போனாள். நான்கைந்து நாட்கள் அவள் என்னிடம் சரியாகக் கூடப் பேசவில்லை.

ஆனால் குப்பைத் தொட்டி மட்டும் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக, வயிறு வீங்கிக் கடைசியில் குப்பைகளுக்கு நடுவே குன்றிமணியாகக் காணாமல் போனது. நகராட்சி குப்பை லாரி வந்தபாடில்லை. வாரம், தவறினால் பதினைந்து நாட்களுக்குள் வந்து விடும் லாரி, மாசக் கணக்காகியும் வரவில்லை. என் வீட்டுக்கு முன்பாகக் குப்பை மலை உருவாகி, துர்நாற்றம் கிளம்பி, டைனிங் ஹால் வரை எட்டிப் பார்த்தது. தேளும், பூரானும் எங்களைத் தேடி வந்து குசலம் விசாரித்தன. பாம்பு மட்டும்தான் பாக்கி.

எனக்கு, 'ஏண்டா இங்கு வந்தோம்,' என்றாகி விட்டது. ஜானுவோ 'வாடகை வீடு பாருங்க' என்று அழவே ஆரம்பித்து விட்டாள். நானும் நகராட்சிக்குச் சென்று ஞாபகப்படுத்தி நடையாய் நடந்து தளர்ந்து போனேன்.

ஆறுமுகம்தான் கடைசியில் அந்த ரகசியத்தைச் சொன்னான். "உங்களைப் பார்த்தா பாவமா இருக்கு ஸார். இங்கே இருக்கறவனுங்க எந்த நல்ல காரியத்துக்கும் ஒண்ணு சேர மாட்டானுங்க ஸார். தன் வரைக்கும் தொந்தரவு இல்லாமப் பாத்துக்குவானுங்க. அடுத்தவன் கண்ணுல ரத்தம் வடிஞ்சாக் கூட வீட்டுக்குள்ளே அடைஞ்சுக் கிட்டு ஜன்னல் வழியா வேடிக்கை பார்ப்பானுங்க. அடாவடித்தனம் ஒண்ணுக்குத்தான் கொஞ்சம் அசைஞ்சு குடுப்பானுங்க. எவனாவது என் கையிலே மோதறானுங்

களா பாருங்க...'' என்றான்.

சுற்றுப்புறத்தின் சுகாதாரத்தையே பாழ் படுத்தத் துணியும் இந்தப் பாமரத்தனம் படித்தவர்களிடமா வெளிப்பட வேண்டும்? எனக்கு ஆவேசமாய் இருந்தது. என்ன செய்ய!

என் சொந்தச் செலவில் ஆள் வைத்துக் குப்பைகளை எடுத்து, என் வீட்டு வாசலைச் சுத்தமாக்கிக் கொண்டேன். மறக்காமல் அந்தக் குப்பைத் தொட்டியையும் தூரமாகக் கொண்டு போய் ஒரு மூலையில் போட்டேன். அதற்காவது யாரேனும் மூச்சு விட்டார்களா உஹூம்! எதுவுமே நடக்காதது போல வழக்கப்படி குப்பைகளைக் கூட்டித் தத்தம் வாசலில் ஒதுக்க ஆரம்பித்தார்கள். இப்போது எங்கள் குடியிருப்புக்கு யாராவது வந்தால் கூடக் குப்பைகள் மீது தான் நடக்க வேண்டும்...

ஆபீஸ் டூர் போய் விட்டு ஒரு வாரம் கழித்து வீட்டுக்கு வந்த எனக்கு, அதிர்ச்சி காத்திருந்தது. எல்லோருடைய வாசலும் படு சுத்தமாக இருந்தது. மருந்துக்குக் கூட ஒரு குப்பை வேண்டுமே! உஹூம்.. என் மனைவி கூட வீட்டு வாசலில் மூங்கில் தப்பையில் பின்னிய குப்பைக் கூடை ஒன்றைப் பெரிதாக வைத்திருந்தாள்!

நான் மலைத்து நிற்பதைப் பார்த்த ஜானு சிரித்தபடி உள்ளே போய் ஒரு அச்சடித்த இன்லண்ட் லெட்டரைக் கொண்டு வந்து நீட்டினாள். யாரோ 'சுற்றுப்புறக் காப்பு மையம்' என்ற அமைப்பிலிருந்து 'டைப்' அடித்து அனுப்பி இருந்தார்கள்.

''ஐயா, இந்த வருடம் உங்கள் 'அலமேலு நகரை' எங்கள் மையம் தத்து எடுத்துக் கொண்டிருக்கிறது. அடுத்த மாத இறுதியில் நாங்கள் சோதனைக்காக வரும் போது, சுத்தமாக வைத்திருக்கும் மூன்று வீடுகளைத் தேர்ந்தெடுத்து முறையே ரூபாய் 3000, 2000, 1000 பரிசு வழங்கி, மேற்கொண்டு சுற்றுப்புறச் சுத்தத்தைப் பேணிக் காக்க வழிமுறைகள் சொல்லுவோம். தயை கூர்ந்து தாங்கள் ஒத்துழைக்க வேண்டுகிறோம்.''

''இந்த லெட்டர் எல்லாருக்கும் வந்திருக்கு'' என்றாள் ஜானு.

பார்த்தேன். எல்லோருடைய வீட்டு வாசலிலும், அவரவர் வசதிக்கேற்பப் பிரம்புக் கூடை, சிமெண்ட் பைப், மரப்பெட்டி, டிரம் என்று குப்பைக் கூடைகள் வரிசையாக நின்றன. எல்லோரும் அக்கறையாகக் குப்பைகளைப் பொறுக்கித் தொட்டியில் போட்டுக் கொண்டிருந்தனர். அதைப் பார்க்கும் போது ஆளுக்கொரு குப்பைத் தொட்டியை முதுகில் சுமப்பது போல எனக்குத் தோன்றியது.

நான் மெல்லச்சிரித்துக் கொண்டேன். இனி இரண்டு மாதங்களுக்கு இந்தக் 'குப்பை' பிரச்னை இல்லை!



வெள்ளரிக்காயை ஒரு பிளாஸ்டிக் பேப்பரில் சுருட்டி அதையே துப்பாக்கி போல் காட்டி பதினாலு தடவைகளில் ஒன்பதாயிரம் பவுண்டு வரை கொள்ளையடித்திருக்கிறார் எர்னஸ்ட் கௌலி என்பவர். இந்தச் சம்பவங்கள் லண்டனில் நடந்திருக்கிறது!

— வி. ந. ஸ்ரீதரன்.



''தலைதீபாவளிக்கு வந்த மாப்பிள்ளை, சமையல் அறையிலே என்ன செய்யறார்?''

''அதை ஏன் கேட்கிறீங்க? கணக்கு புரொபசராச்சே! ஜாங்கிரி வட்டத்துக்கு விட்டம் எவ்வளவுன்னு அளந்துக்கிட்டிருக்காரு!''



அம்மா: ச்சூ... என்னடா அழுகை? எண்ணெய் தேய்க்கக்க வாடா!

கு. நட்சத்திரம்: அதுக்கு என் 'டூ'ப்பை அனுப்பறேனே!

— 'ஹரிபால்'

# வல்லமை

**சென்ற வாரக் கதை...**

**வந்தனா ஒரு புதுமைப் பெண். பெண்கள் பூ வைத்துக் கொள்வது கூடப் பெண்ணடிமைத் தனத்தின் ஓர் அங்கமே என்று நினைப்பவள். ஒரு நாள் தன் தாய் ஆசையோடு வைத்து விட்ட பூச்சரத்தை, ஆபீஸ் போகும் வழியில் தென்பட்ட குப்பைத் தொட்டியில் எடுத்துப் போடுகிறாள்...**

## 2

என்றைக்கெல்லாம் அம்மா பூ வைத்துக் கொள்ளச் சொல்கிறாளோ, கூடிய வரை தவிர்த்து விடுவாள் வந்தனா. மீறி எப்போதாவது அம்மாவே பிடிவாதமாக் வைத்து விடும் போது, அப்போதெல்லாம் இப்படித்தான் வழக்கமாகச் செய்கிறாள்.

இது அண்ணன் கோபிக்கு மட்டும் தெரியும். சொல்லியிருக்கிறாள். புரிந்து கொண்டிருக்கிறான். அம்மாவிடம் வாதம் செய்ய முடியாது. செய்வதில் பிரயோஜனமில்லை. பிறவிக் குருடனுக்கு, நிறம் என்றால் என்ன என்று, எத்தனை மணி நேரம் விளக்கினாலும் புரியாது. அப்படித்தான் அம்மாவும் புரிந்து கொள்ள மாட்டாள். அல்லது புரிந்து கொள்ள மறுப்பாள். ஆனால் அம்மா புரிந்து கொள்ளவில்லையே என்று கோபப் படுவதில் அர்த்தமே இல்லை. அவள் வேறு தலைமுறை! அவளுக்கு வேறு வளர்ப்பு முறை.

பூ வைத்து விட்டு என்ன சொன்னாள்?

''மகாலக்ஷ்மி மாதிரி இருக்கே...''

மகாலக்ஷ்மியை யாரும் உற்றுப் பார்ப்பதில்லை. மனித லக்ஷ்மியை உரசியே பார்ப்பார்கள்.

தலைக்குப் பூ வைத்துக் கொள்வது அலங்காரம். ஆனால் எனக்கு அது ஒரு வகையில் அபத்தம். என் தலையில் பூ, நான் பார்க்கவா? யார் யாரோ பார்த்து ரசிப்பதற்கு நான் செலவழித்து வைத்துக் கொள்ள வேண்டுமா?

பூ — பார்க்க வைக்கிற சமர்சாரம். 'என்னைத் திரும்பிப் பார்' என்று ஓர் அழைப்பிதழைச் சுமந்து கொண்டு, நான் ஏன் நடக்க வேண்டும்?

பூ — அழகான விஷயம். மென்மையான விஷயம். அதை வைத்துக் கொள்ளும் பெண்ணும் அழகானவளாம். மென்மையானவளாம். அழகை அழகு கூட்டிக் கொள்கிறதாம். கை தட்டலுக்காகப் பாடின கவிஞர்கள் நெஞ்சைத் தொட்டுச் சொல்லட்டும். ஒப்பிட இன்னும் விஷயங்கள் இல்லையா?

பூ — நிரந்தரமில்லாதது. தற்காலிக மலர்ச்சி. பிறகு வாடல். பெண்ணே நீயும் அப்படித்தான். உன் மலர்ச்சியும் தற்காலிகமானதுதான். உபயோகம் முடிந்ததும் வாடின பூ சாக்கடையில். பெண்ணே, உன்னையும் உபயோகம் முடிந்ததும் அப்படித்தான் வீசுகிறோம். இப்படி விட்டுப் போனவற்றை, யார் பாடுவதாம்?

''எனக்குப் பங்களா வேணாம். கார் வேணாம். நகை வேணாம். புடைவை வேணாம். புருஷன் கையால ஒரு முழப் பூ போதும்.''

சினிமா வசனத்திற்குக் கண்ணீர் சொட்ட உட்கார்ந்திருக்கும் கூட்டத்திற்கு, 'அதென்ன புருஷன் கையால?' என்று யோசிக்கத் தோன்றியிருக்கிறதா?

அன்பின் அடையாளமா, இல்லை காரியத்திற்கான கையூட்டலா? அதென்ன







# தாராயோ?

புருஷன் கையால? என்னத்துக்காக இந்தக் கிறுக்குப் பிடித்த செண்ட்டிமெண்ட்? ஒன்றுமில்லாததையெல்லாம் பெரிதுபடுத்தி விட்டார்கள். பெரும்பாலும் யாருமே கேள்வி கேட்பதில்லை. கேட்பதிருக்கட்டும், கேள்வியை யோசிப்பதேயில்லை.

ஒற்றை விரலில் ட்வைன் நூலை நெருக்கமாகச் சுற்றிச் சுற்றி வர, ஒரு கட்டத்தில் விரல் மரத்துப் போய் விடும். பிறகு ஒவ்வொரு சுற்றாகப் பிரிக்கப் பிரிக்க, கொஞ்சம் கொஞ்சமாய் உணர்வு வரும். அப்படி பெண்ணைச் சுற்றின சம்பிரதாயங்கள் ஒரு கட்டத்தில் ரத்த ஒட்டத்தையே நிறுத்திவிருக்கிறது.



உடன்கட்டை ஏறும் சதி தடை செய்யப்பட்ட போது, ஒரு சுற்று பிரிக்கப்பட்டது. பால்ய விவாகம் தடை செய்யப்பட்ட போது, மற்றொரு சுற்று. விதவைகளைத் தலையை மழித்து, கட்டாயத் துறவறத்திற்குத் தள்ளின வழக்கு மாறி, விதவைத் திருமணங்கள் ஆதரிக்கப்பட்ட போது, இன்னொரு சுற்று. வேலை வாய்ப்பு, பொருளாதார உரிமை என்று சுற்றுக்கள் பிரிக்கப்பட்டுக் கொண்டேயிருந்தாலும், இன்னும் பெண் என்னும் விரலுக்கு, முழு உணர்வு திரும்பவில்லை என்பதே நிஜம். இன்னும் பிரிக்கச் சுற்றுக்கள் பாக்கியிருக்கின்றன.

இதையெல்லாம் அம்மாவிடம் பேச முடியாது.

வந்தனா சிந்தனையோட்டத்தைத் தடை செய்து விட்டு, சுரங்கப் பாதையின் மறு முனையில், படிகளேறியதுமே, எதிரே இருந்த பெரிய பல மாடி காம்ப்ளக்ஸ் கட்டடத்தை நோக்கி நடந்தாள்.

அதில் செருப்புக் கடை திறந்து, லெதர் மணந்தது. ரெடிமேட் கடை திறந்து, ஹாங்கர்களில் கவுன் மாட்டித் தொங்க விட்டுக் கொண்டிருந்தார்கள். ஷோ கேஸ் பொம்மைப் பையன், உடை மாறியிருந்தான். கட்டடத்தின் உள்ளே, மாடிப் படிகளை அடையுமுன், ஓர் ஆடியோ கேஸட் ரெக்கார்டிங் செண்ட்டரில், சித்ராவும் மனோவும் காதல் பாடிக் கொண்டிருந்தார்கள். ஒரு டைப்ரைட்டர் கம்பெனியின் சர்வீஸ் செண்ட்டரில், ஊதுபத்தி கொளுத்தி, நாணயங்கள் கொட்டும் லக்ஷ்மி படத்தின் மூலையில் செருகியிருந்தார்கள்.

படிகள் ஏறினாள். வளைவு திரும்புமுன் உள்ள, பெரிய சுவரில், ஒவ்வொரு மாடியிலும் உள்ள நிறுவனங்கள், தங்கள் பெயர்களை எழுதி, 'செல்லும் வழி' என்று அம்புக் குறி போட்டு, கலர் கலராய் எழுதியிருந்தார்கள்.

முதல் மாடியில், அந்தச் சினிமா டிஸ்ட்ரிபியூஷன் கம்பெனியின் அலுவலகத்தைக் கடந்த போது, கழுத்து மூடிய பனியன் அணிந்த அந்த இளைஞன், அவளுக்காகவே காத்திருப்பதும் கீழுதட்டை ஈரப்படுத்திக் கொள்வதும் ஓரக் கண்களால் பார்க்க முடிந்தது. ''ஹலோ,'' என்றான் அவன்.

வந்தனா பதிலுக்குப் புன்னகை மட்டும்

**பட்டுக்கோட்டை பிரபாகர்**



எடிட்டர்: "என்ன சார் இது? ஜோக் எழுதிட்டு, ஒரு பக்கம் ஏதோ எழுதி இணைச்சிருக்கீங்க?"

எழுத்தாளர்: "அதற்கு விளக்கம்தான்!"

— ஆர். வசந்தகுமார்.

---

தந்து விட்டுக் கடந்தாள். ஒருமுறை அனாவசியமாக எதிர்ப்பட்டு, 'டைம் என்ன?' என்று கேட்டு வழிந்தாயிற்று. இன்னொரு முறை, 'ஏன் நடந்தே வர்றீங்க, வீடு பக்கத்திலதானா?' என்று விசாரித்தாயிற்று. அடுத்த கட்டமாக, ஏதாவது ஒரு நாள், அவன் எதையாவது கிறுக்கி, மடித்து, நடுங்கும் விரல்களால் நீட்டத்தான் போகிறான். அன்றைக்கு இருக்கிறது கச்சேரி.

முதல் மாடியின் கடைசியில், ஒரு பெரிய ஹால் முழுக்க அடைத்துக் கொண்டிருந்தது 'குப்தா சர்ஜிகல் எக்யுப்மெண்ட்ஸ்'. வந்தனா பார்ட்டைமாக வேலை பார்க்கும் இடம். நியாயமாக, அது கடைதான். பிரம்மாண்டமான கடை. பதினெட்டு ஊழியர்கள். கண்ணாடி போட்ட ஷோ கேஸ்கள். பல் டாக்டர் நம்மை உட்கார வைக்கிற ஸ்பெஷல் நாற்காலி முதல், ஊசி போடும் நீடில் வரை, மருத்துவத் துறைக்குத் தேவையான அத்தனை உபகரணங்களும் உண்டு. ஆபரேஷன் தியேட்டரில் இருக்க வேண்டிய கருவிகள், கையுறைகள், நரம்புகள், செயற்கைக் கால், ஆக்ஸிஜன் சிலிண்டர், இன்னும் எத்தனையோ கருவிகள்.

அது மோகன் குப்தாவின் தனி நிறுவனம். அவன் கொள்ளுத் தாத்தா ஆந்திராவிலிருந்து இங்கே வந்து, வட்டிக் கடை வைத்துச் செழித்து, அடுத்த தலைமுறைகளில் தொழில்கள் மாறி, மோகன்குப்தா பார்மஸிஸ்ட் கோர்ஸ் படித்து, முதலில் மருந்துக் கடை வைத்துப் பிறகு விரிவாக இதில் இறங்கி, இன்று பெரிய பெரிய ஆஸ்பத்திரிகளுக்குக் காண்ட்ராக்ட் எடுத்துச் சப்ளை செய்கிறான். அவனுக்குக் கடையில் நடக்கும் வியாபாரம் என்பது, ஒரு கொசுறு. ஒரு நாளைக்குப் பத்துப் பேருக்கு மேல் வர மாட்டார்கள். ரெப்ரசன்டேட்டிவ்ஸ் இரண்டு பேர் துடியாய்ச் சுழல்வார்கள். தமிழ்நாடு, கேரளா, ஆந்திரா என்று திரிந்து, ஆர்டர்களாகக் கொண்டு வந்து கொட்ட, இங்கே சதா பேக்கிங் நடந்து கொண்டேயிருக்கும். ஒரு வகையில் இது கடை. ஒரு வகையில் இது கோடவ்ன்.

இதில் கணக்கெழுதி, லெட்ஜரில் போஸ்ட்டிங்ஸ் செய்து, ஆர்டர் டைப் செய்து, இன்வாய்ஸ் போட்டு, பேக்கிங் ஸ்லிப் எழுதி, கஸ்டமர்களுக்குத் தபால் டைப் செய்து... இதுபோன்ற அலுவலக வேலைகளை மட்டும், காலை ஒன்பது முதல், மதியம் ஒன்று வரை, பார்ட் டைமாகப் பார்த்துக் கொடுத்தல், வந்தனாவின் வேலை. ஐந்நூறு ரூபாய் சம்பளம்.

வந்தனா கடைக்குள் நுழைந்த போது, மோகன் குப்தா சேர் கொள்ளாமல் சகல பக்கங்களிலும் பிதுங்கி அமர்ந்து கொண்டு, தன் ஒன்று விட்ட சித்தப்பாவோ, பெரியப்பாவோ... ஒருத்தரை காஷியர் கம் மேனேஜராக நியமித்திருந்தான்— அவரைச் சத்தம் போட்டுக் கொண்டிருந்தான்.

"வயசு ஏறிப் போயிந்தேகண்ட புத்தி கொஞ்சமாச்சும் லேது. ஆனந்தா மெடிக்கல்சுக்கும் ஆனந்தி மெடிக்கல்சுக்கும் வித்தியாசம் தெலியதா மீகு? ஏல என் பிராணனை வாங்கறீங்க பெத்தநாய்னா? வாடுதிக்கிற ரூபாய் வாங்கிட்டு வரச் சொன்னா வீடுதிக்கிற போய்க் கேட்டிருக்கீங்களே. அப்புறம் சண்டைக்கு வராம ஏமி சேஸ்த்துடு?"

மோகன்குப்தாவுக்குத் தெலுங்கு கலக்காமல் தமிழ் பேச வராது. ஆங்கிலம் என்றால் இழுத்த இழுப்புக்கு வரும். சதா பீடா சாப்பிட்டுப் பல் குத்திக் கொண்டே, போனில் யாரோடாவது பேசிக் கொண்டேயிருப்பான். சினிமா என்றால் பைத்தியம். ஓர் ஆங்கிலப் படம் விட மாட்டான். நூற்று நாற்பது ரூபாய்க்கு, பிளாக்கில் டிக்கெட் வாங்க அஞ்சவே மாட்டான். நியூஸ் பேப்பரில் அவன் எந்தத் தியேட்டரில் என்ன படம் என்று பார்ப்பதைத் தவிர, மற்ற எதையும் முழுவதுமாகப் படிக்க மாட்டான். அவனுக்கு இரண்டு குழந்தைகள். குண்டு குண்டாய் அவனை மாதிரியே சிவப்பாக இருக்கும். அவர்கள் கடைக்கு வந்து விட்டால், தன் பெத்த நாய்னாவைக் காரில் அனுப்பி ஐஸ்கிரீம் வாங்கி வரச் சொல்வான்.

"குட் மார்னிங் சார்" என்றாள் வந்தனா.

"ராம்மா" என்று உடனே முகத்தில் கோபம் தணிந்து, "நீகு ஒரு போன் ஒச்சிந்தே. நம்பர் குறிச்சேன்." துண்டுச் சீட்டை அவளிடம் நீட்டி விட்டு கிர்ர்ரீச் என்று தன் சுழல் நாற்காலியில் திரும்பி, "பெத்த நாய்னா, போய் வேலையைப் பாருங்க. உங்களை வேலைக்கு வச்சிருக்கிறது என் தல்ராத்தலு." என்றான். பெத்த நாய்னா தன் நரைத்த மீசைக்குள் சிரித்து விட்டு நகர்ந்தார். அவர் என்றைக்கும் கோபமடைந்ததேயில்லை.

வந்தனா தன் கண்ணாடி பரப்பின மேஜையில் அமர்ந்து, டிராயரில் கைப்

பையை வைத்தாள். அந்த நம்பரைப் பார்த்ததுமே தெரிந்தது.

அழைத்தது கோபி. தேனாம்பேட்டையில் தன் அலுவலகத்தில் இருந்து அழைத்திருக்கிறான். எதற்காக அழைப்பு என்பதும் அவளுக்குத் தெரியும்.

"சார், ஒரு போன் செஞ்சுக்கறேன்."

"லோக்கல் காலுக்கெல்லாம் ஒவ்வொரு தடவையும் நா பர்மிஷன் அடகொத்தம்மா. சேசுதோ. அன்னிக்கு வந்தான் சேல்ஸ் டாக்ஸ் ஆபீசர். எஸ்.டி.டி.ல டெல்லியிலே இருக்கிற கொழுந்தியாகிட்டே பதி நிமிஷாலு மாட்லாடுத்தாடு தொங்க கொடுகு! யார் வீட்டு துட்டு?"

வந்தனா புன்னகை செய்து, ரிசீவரில், "மிஸ்டர் கோபாலகிருஷ்ணன் ப்ளீஸ்..." என்று காத்திருந்து, "என்ன கோபி, கூப்பிட்டியாமே?" என்றாள்.

"ஆமாம். வந்து... நேத்து டென்ஷன் தாங்காம கொட்டிட்டேன். ஆனா நான் உன்னைச் சொல்லலை வந்தனா. பானுவுக்குப் படட்டும்னு நினைச்சித்தான் சொன்னேன். உன்னை ஹர்ட் பண்ணிடுச்சின்னு நினைக்கிறேன். ஏன் காலைல பேசவே இல்லை எங்கிட்டே? எனக்குச் சங்கடமாப் போச்சு. அதான் கேட்டுடலாம்னு கூப்பிட்டேன். கோபமா இருக்கியா நீ?"

"சேச்சே. என்னண்ணா இது, உன் மேல என்னிக்காச்சும் நான் கோபப்பட்டிருக்கேனா? நான் எதையும் தப்பா எடுத்துக்கலைப்பா. நீ அண்ணிக்காகத்தான் சொன்னேன்னு கூடப் புரிஞ்சுக்காமயா இருக்கேன் நான்."

"இப்பத்தான் நிம்மதியா இருக்கு. இன்னிக்கு ஏ.ஐ.ஆர்.ல ப்ரோக்ராம் இல்லைன்னாச் சொல்லு, எல்லோருமா ஈவினிங் எதாச்சும் பிக்சர் போலாம்."

"ப்ரோக்ராம் எதுவும் இல்லை. ஆனா அரவிந்த்னு ஒரு தொழிலதிபர்கிட்டே ஒரு பேட்டிக்காக அப்பாயிண்ட்மெண்ட் கேட்டிருக்கேன். இன்னைக்கு போன் செஞ்சி சொல்றேன்னார். ஈவினிங் வரச் சொல்லிட்டா, நான் வர முடியாது. அந்த போன் வந்ததும், நான் மறுபடி உன்னைக் கூப்பிட்டு உறுதியாச் சொல்றேனே..."

வைத்து விட்டுத் தன் வேலைகளில் ஆழ்ந்த வந்தனா — ஆல் இந்தியா ரேடியோவில் பகுதி நேர அறிவிப்பாளராக, நிகழ்ச்சித் தொகுப்பாளராகச் செயல்படுவதுண்டு. 'உங்களுக்கு அன்பான மாலை வணக்கங்களைச் சொல்லி நிகழ்ச்சியைத் துவங்குவது வந்தனா' எனும் அவளின் குரல், ரேடியோ கேட்கிற வழக்கமுள்ளவர்களுக்குப் பரிச்சயமான ஒன்று. பாடல்களை ஒலிபரப்புவதற்கு முன்பாக, ஒரு சில வரிகளில் அவள் சொல்லும் கமெண்ட்டுகளை ரசித்து, நிறையக் கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள். திரைகானம், திரைப்படப் பாடல்கள் பகுதிகளில் பாரதியாரின் பாடல் ஒன்றைக் கண்டிப்பாக ஒலிபரப்பி விடுவாள்.

தவிர பேட்டிகள், சிறு நாடகங்கள், உரையாடல்கள் என்று அமைப்பதும் உண்டு. இவள் ஆசையாய்த் தயாரித்து எடுத்துச் செல்லும் சில ப்ரோக்ராம்கள், வானொலிக்கென்று உள்ள சட்ட, திட்டங்கள் காரணமாகத் தேர்வாகாத போது மட்டும், சற்று ஏமாற்றமாக இருக்கும். மற்றபடி இது வந்தனாவுக்கு மிகவும் பிடித்தமான, உற்சாகமான, ஈடுபாடு காட்டும் விஷயம்.

டெலிபோன் ஒலித்து, மோகன்குப்தா எடுத்து, "போன் நீகும்மா" என்றான்.

வாங்கிக் கொண்டு, "ஹலோ, வந்தனா ஹியர்," என்றாள்.

"நான் அரவிந்த் பேசறேன், குட் மார்னிங்."

"குட்மார்னிங் சார்."

"டைம் கேட்டிருந்தீங்க. இன்னிக்கு ஈவினிங் நாலு மணிக்கு நான் ஃப்ரீ. உங்களுக்குச் சௌகரியப்படுமா?"

"நோ ப்ராப்ளம் சார். நாலு மணிக்கு நான் வர்றேன். உங்க வீட்டுக்குத்தானே?"

"இல்லை. என் ஆஃபீஸ் தெரியுமில்லே உங்களுக்கு?"

"தெரியும் சார். வர்றேன். தேங்ஸ்," என்றாள்.

மறுமுனையில் ரிசீவரை வைத்த அரவிந்த், திரும்பி மேஜை மேல் சாய்ந்து, அமர்ந்து, தன் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்ட நண்பன் கிருஷ்ணனைப் பார்த்தான். "கேட்டியில்லே? ஸோ, இன்னிக்கு அஞ்சு மணிக்கு முன்னால நான் உன்னோட வர முடியாதுடா," என்றான்.

"வந்தனா!" என்றான் கிருஷ்ணன். "ரேடியோல பல தடவை கேட்டுருக்கேன். குரல் ரொம்ப ஸ்வீட்டா இருக்கும். பார்த்துடுவமே ஆளும் ஸ்வீட்டா இருக்காளான்னு. பேட்டி எடுக்கறப்போ நானும் இருப்பேன் இங்கே..."

(தொடரும்)



"தொடர் கதையைக் கொஞ்சம் சுவாரஸ்யமா எழுத முயற்சி பண்ணுங்க!"

"ஏன் சார்?"

"நிறைய வாசகர்கள் பின் கதைச் சுருக்கம் போடச் சொல்லி லெட்டர் எழுதியிருக்காங்க!"

— ஞா. ஞானமுத்து.

# மங்கையர் மலர்

நவம்பர்'89



## ஸ்ரீசாய் ராம்!

—பகவான் ஸ்ரீ சாயி பாபா
பற்றிய சிறப்புக் கட்டுரை

## முப்பது, நாற்பது, ஐம்பதுகளில் பெண்கள்!

சிறப்பு இலவச இணைப்பு!

மற்றும் ஏராளமான
சுவையான செய்திகள்

# ஏழாவது இரவு

2

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:







சட்டென்று அவன் முகம் மாறியது. நெஞ்சில் வேதனை நிறைந்தது.

நிகழ்காலத்திலிருந்து இறந்த காலம்! எவ்வளவு துரிதமாக அந்த மாற்றம் நிகழ்ந்து விட்டது!

அதை எண்ணிய போது உடைந்து அழுது விடுவான் போலிருந்தது..

கூடாது. உடைவதற்கோ, சிதறுவதற்கோ இது நேரமில்லை. இன்ஸ்பெக்டர் கருதுவதைப் போல அது விபத்தில்லை. நிச்சயமாக அப்படி இருக்க முடியாது. அவன் உள் மனசுக்கு அது தெரியும். அப்படி அவன் நம்புவதற்குப் போதுமான காரணம் இருந்தது.

அதை அவன் இப்போது வெளிப்படுத்தப் போவதில்லை. அதுதான் அவனுடைய துருப்புச் சீட்டு. சரியான நேரத்தில் அதை வெளிப்படுத்தி, அவன் அக்காவின் மரணத்துக்குக் காரணமானவனை வெளிப்படுத்துவான். அதுவரை அவன் மற்றவர்கள் போக்கிலே தான் போக வேண்டும்...

சமாளித்துக் கொண்டான். சொன்னான்.


















சொல்லிவிட்டு எழுந்தான். திரும்பவும் சந்திப்பதாகக் கூறி இன்ஸ்பெக்டரிடம் விடை பெற்றான்.

அவனைப் பார்த்த பார்வையிலேயே தானும் கூட வரவேண்டும் என்று அவன் விரும்பியதைப் புரிந்து கொண்ட அவளும் இன்ஸ்பெக்டரிடம் விடைபெற்றுப் புறப்பட்டாள்.

வெளியே போகும் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தார் இன்ஸ்பெக்டர் முரளி. போன் ஒலித்தது. திரும்பி அதை எடுத்தார்.

போனில் வந்த செய்தி அவரைத் திடுக்கிட வைத்தது. பரபரப்போடு எழுந்தார். போகும் அவர்களை நிறுத்துவதற்காக அவசரமாக வெளியே வந்தார்.

பின்னே அமர்ந்திருந்த அவளுடன் மோட்டார் சைக்கிளில் வேகமாகப் புறப்பட்டுப் போய்க் கொண்டிருந்தான் அவன்.

அவர் அழைத்த குரல் அவர்களுக்குக் கேட்கவே இல்லை.

— தொடரும்

# இதர எல்லா ஹேர் டைகளையும் சேர்த்தாலும் அவற்றைவிட ஏராளமானமக்கள் உபயோகிப்பது கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர் டை

அவற்றிற்கான 3 சிறந்த காரணங்கள்




இரண்டு நேச்சுரல் சாயல்களில் கிடைக்கிறது: பிளாக் மற்றும் டார்க் பிரவுன்

**1** கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டை கேசத்திற்கு இயல்பான வண்ணத்தையும், தோற்றத்தையும் தருகிறது. இதிலே ஒரு உள்ளிணைந்த கண்டிஷனர் உள்ளது: இது கேசத்தை மென்மையோடும் படிமானத்தோடும் வைத்துக்கொள்ள உதவுகிறது. உண்மையிலேயே, நீங்களே சொன்னால் ஒழிய ஒருவரும் அறிந்துகொள்ள முடியாது.

**2** இதர ஹேர் டைகளைப் போல் அல்லாமல், கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டை உபயோகிக்க எளிதானது, வசதியானது. ஆம், இது உங்கள் கேசத்தை ஷாம்பூ செய்வதுபோல் சுலபமானது.

**3** கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டையின் தரத்தைப் பற்றி நீங்கள் உறுதிப்படுத்திக்கொள்ள முடியும். காரணம், இது உங்கள் கேசத்தை பாதுகாக்கும். வண்ணம் விசேடமாகத் தயாரிக்கப்பட்டது. முழுமையான பாதுகாப்பு— இதுவே, கோத்ரெஜின் உறுதியளிப்பு.

**கோத்ரெஜ்®** வழங்கும் தானே-பரவும் பெர்மனெண்ட் ஹேர் டை.

CLARION/B/GS/50/173 TML





நளினியின் இஷ்ட தெய்வம் ஸ்ரீராமன்.

பத்தாயிரம் பேரை மணந்த தசரதச் சக்கரவர்த்தியின் மகனாகப் பிறந்தும், அரசனாகப் பிறந்தவன் என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்ற சர்வாதிகாரங்களைப் பெற்றிருந்தும், ஏக பத்தினி விரதனாக அவன் வாழ்ந்ததாலேயே, நளினிக்கு ராமன் மிகவும் பிடித்த தெய்வம்.

இலங்கைப் போருக்குப் பிறகு, ராமன் சீதையைத் தீக்குளிக்கச் சொன்னதோ, பின்னர் அயோத்தி மக்களின் உணர்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துச் சீதையைக் காட்டுக்கு அனுப்பியதோ கூடத் தவறாகப் படவில்லை நளினிக்கு. ..அவன் தன் மனைவியைத் தவிர, வேறு எந்தப் பெண்ணையும் ஏறெடுத்துப் பாராதவனாக இருந்தான் என்பதுதான் அவளுக்கு மிகவும் பிடித்த விஷயம்.

மேலும்—

'மனைவி உயிருடன் இருக்கும்போது, இரண்டாவது திருமணம் செய்து கொள்வது சட்டப்படி குற்றம்' என்றுள்ள இன்றைய சூழ்நிலையில் கூட பல ஆண்கள் தவறான வழிகளில் செல்வதைக் கண்கூடாகக் கண்டவள் அவள்.

சுமார் நாற்பது வயதான எதிர் வீட்டுக்காரர் திடீரென மாரடைப்பால் இறந்ததும் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு அழுது கொண்டிருந்த அவர் மனைவி மக்கள், வாசலில் வந்து நின்ற ஆட்டோவிலிருந்து இறங்கிய பெண்மணி ஒருத்தி, ''என் ராஜா போயிட்டியா?'' என்றபடி கதறிக் கொண்டே வந்தபோது திடுக்கிட்டனர். இறந்து போனவரின் 'நான்கு வருட' 'செட்டப்' அவள் என்று

# ராமனைப் போல் ஒருவன்

## சத்யா ஸ்ரீனிவாசன்

தெரிந்ததும் அனைவரின் அழுகையும், கண்ணீரும் சட்டென நிற்க, சாவு வீடே போர்க்களமாக மாறிவிட்டது.

அடுத்து பக்கத்துவீட்டு போஸ்ட்மாஸ்டர் கதை.

நான்கு குழந்தைகளுக்குத் தந்தையான அவர், தம்முடன் பணிபுரியும் பெண் ஒருத்தியின் அழகில் மயங்கி, அவளைச் சின்ன வீடாக வைத்துக் கொண்டுவிட்டார். அவருடைய மனைவியால் அழமட்டும்தான் முடிந்தது.

நளினியின் குடும்பத்திலேயே அவளுடைய சித்தப்பா — ஐம்பது வயதைத் தாண்டியவர். மாதம் ஒரு முறையாவது தவறாமல் கிராமத்துப் பக்கம் போய்விடுவார். அவர் ஏன் அப்படி ரெகுலராகப் போகிறார் என்பது ஊரறிந்த ரகசியம். தோட்டக்காரி பொன்னம்மா அவருக்கு கீப்.

இதையெல்லாம் பார்த்த நளினிக்கு, 'தனக்கு வாய்ப்பவன் எ ப் ப டி இருப்பானோ' என்ற பயம் ஏற்பட்டதில் வியப்பில்லை.

''ஸ்ரீராமா எனக்குச் சொத்து சுகம் வேண்டாம். எனக்கு வரப்போகிறவர் அழகாக இருக்க வேண்டும். நல்ல உத்யோகத்தில் இருக்க வேண்டும் என்று கூட நான் கேட்கவில்லை. அவர் உன்னைப் போல் குணஸ்தனாக இருந்தால் போதும்'' என்றுதான் கடவுளை வேண்டிக் கொள்வாள்.

அவளுடைய பயத்தை அறிந்திருந்த அவளுடைய அம்மா, சிரிப்பாள்.

''பைத்தியம், பைத்தியம். உலகத்தில் எல்லா ஆம்பளைங்களுமா கெட்டவங்களா இருப்பாங்க? இப்ப உங்க அப்பா நல்லவராயில்லே! இதே தெருவுலே சுமார் நூறு குடும்பங்கள் இருக்கு. அதுல யாரோ ஒருத்தர், ரெண்டுபேர்தானே த ப் பு ப் பண்ணியிருக்காங்க. நாம் கெட்டதையே பார்த்துட்டு இருக்காமே நல்லதையே பார்த்து மனசுலே பதிய வச்சுக்கணும்'' என்பாள்.

எப்படியோ நளினியின் விருப்பப்படியே கணவனாக அமைந்தான் பரசுராமன். அவன் பெயரிலேயே ராமன் இருந்தது அவளுக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டது.

முதல் இரவு அன்று அவன் கால்களில் விழுந்து நமஸ்கரித்த நளினி, ''உன்னைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் மனதாலும் நினைக்க மாட்டேன்' என்ற சத்தியத்தை ஸ்ரீராமன் படத்திற்கு முன் நிற்க வைத்துப் பெற்ற பிறகே, நிம்மதியடைந்தாள்.

பரசுராமன் உண்மையாகவே சத்தியவந்தனாக இருந்தான்.

திருமணமான ஒரு சில மாதங்களுக்குப் பிறகு ஒருநாள், திடீரெனப் பெட்டி படுக்கையுடன் வந்து நின்ற நளினியைப் பார்த்து அதிர்ந்து நின்றனர் பெற்றோர்.

''பின்னே என்னம்மா அவர் சரியான அப்பா — அம்மா பூச்சியா இருக்கார். எதுக் கெடுத்தாலும் அப்பா அம்மாகிட்டே சின்னப் பையன் மாதிரி பர்மிஷன் கேட்டுண்டு.... சே சே சகிக்கலே. ஒரு சினிமாவுக்குப் போகணும்னாக் கூட 'இரு அப்பாவிடம் கேட்டுடறேன்'றார். மாமியார்க்காரின்னா எதுக்கெடுத்தாலும் 'மடி, மடி'ன்னு பிராணனை வாங்கறா. 'அ ை த த் தொடாதே; இங்கே நிக்காதே; இப்படித் தலை பின்னிக்காதே'ன்னு ஒரே தொணதொணப்பு. மாமனார் அதைவிட நச்சரிப்பு. 'வெள்ளிக்கிழமையும் அதுவுமா லட்சணமா வீட்லே இருந்து ஸ்வாமி ஸ்லோகம்

சொல்லும்மா. அதைவிட்டுட்டுச் சினிமாவுக்குப் போறேன்றியே?'ன்னு தடை போடறார். இவர் என்னடான்னா அவா சொல்றத்துக்கு எல்லாம் பூம் பூம் மாடு மாதிரி தலையை ஆட்றார்.

"நாளன்னைக்கு எனக்கு பர்த்டே வருது இல்லையாம்மா? நம்ப வீட்லேன்னா பர்த்டேவை எவ்வளவு நல்லா செலிப்ரேட் பண்ணுவோம். நான் ஒரு வாரத்திற்கு முன்னாலே அவர்கிட்டே சொல்லியிருக்கேன். என்னோட பர்த்டே அன்னிக்கு லீவு போட்டுடுங்க. கோவிலுக்குப் போகணும். அப்படியே ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிட்டுட்டுச் சினிமாவுக்குப் போயிட்டு வரலாம்னு. சரின்னு சொல்லியிருந்தார். ஆனா நேத்திக்குத் திடீர்ன்னு அவரோட அப்பா கூப்பிட்டு, 'பரசு நாம் கிராமத்துக்குப் போய் வந்து நாலு மாதம் ஆயிடுச்சு. நிலம் வீடு எல்லாம் என்ன நிலையிலே இருக்குன்னு தெரியலே. அடுத்த மாதம் அறுவடை நடக்கணும். நீ நாளைஞ்சு நாலு லீவு போட்டுட்டுக் கிராமத்துக்குப் போய்வா. குத்தகைக்காரனைப் பார்த்து அறுவடைக்குத் தேவையான ஏற்பாட்டையெல்லாம் கவனிச்சிட்டு வா'ன்னதும் இவர் ஒரு வார்த்தை கூட, 'இவளுக்குப் பர்த்டே வருதுப்பா. நான் இங்கே இருக்கணும்னு ஆசைப்படறா. ரெண்டு நாள் கழிச்சுப் போறேனே'ன்னு சொல்லலை. உடனே, 'சரிப்பா'ன்னுட்டார். எனக்குக் கோபம். 'என்னங்க நான் சொல்லியிருக்கேன் எனக்கு பர்த்டே வருதுன்னு. நீங்க கிராமத்துக்குப் போயிட்டா எப்படின்னு கேட்டதுக்கு, 'அப்பா சொல்றாரில்லே நளினி.... எப்படி முடியாதுன்னு சொல்றது?'ன்றார். எனக்குக் கோபமான கோபம். அப்பா, அம்மா சொல்படிதான் ஆடறதுன்னா, நான் ஒருத்தி எதுக்கு? அதான் அவர் அப்படி கிராமத்துக்குப் புறப்பட்டதும் நான் இப்படி வந்துட்டேன்" என்றாள்.

சிறிது நேரம் வாயடைத்து நின்ற அவள் தாய், மெதுவாகச் சுதாரித்துக் கொண்டு சொன்னாள்:

"மண்டு. நீதானே ராமன் மாதிரி புருஷன் வேணும்னு வேண்டிக்கிட்டே? 'அவன் ஏகபத்தினி விரதனா இருந்தா மட்டும் போதும்; அப்பா, அம்மாவை மதிக்கிறவனா இருக்கக்கூடாது'ன்னு நீ கேக்கலையே! அதான் மாப்பிள்ளை சகலவிஷயத்துலையும் ராமனா இருக்கார். இதுலே என்ன தப்பு? இதுக்கு நீ சந்தோஷப்படணும்," என்றவள், "இன்னொண்ணும் ஞாபகத்துலே வச்சுக்கோ. எதிர்பார்ப்புன்னு எல்லாருக்கும் இருக்கும். உனக்கு எப்படி உன் புருஷன் ராமன் மாதிரி ஏக பத்தினி விரதனா இருக்கணும்னு எதிர்பார்ப்பு இருக்கோ, அதே மாதிரி அவருக்கும் தம் மனைவி சீதை மாதிரி, தன் பேச்சுக்கு முகம் கோணாமே நடந்துக்கணும்; தன்னோட அப்பா, அம்மாவைத் தெய்வமா மதிக்கணும்னு எல்லாம் எதிர்பார்ப்பு இருக்கலாம் இல்லையா? அவரைப் புரிஞ்சிண்டு நடந்துக்கணும். தெரியுதா?" என்றபடி மகளை அணைத்துக் கொண்டாள்.

"நாம சீதையா நடந்துண்டா ஆம்பளைங்களும் ராமனா நடந்துப்பாங்க. இதிலே சந்தேகம் வேணாம். இப்ப அவர் கிராமத்துக்குப் போயிட்டார்ன்றதாலே உன் மேல் அவருக்கு அன்பே இல்லேன்னு நினைக்காதே. உனக்கு பர்த்டே அன்னிக்குப் புருஷன்கூட இருக்கணும்னு தோணியிருந்தா நீயும் மாமனார் மாமியாரோட அனுமதி வாங்கிண்டு அவரோட கிராமத்துக்கே போயிருக்கணும். நீ பைத்தியம் மாதிரி இங்கேன்னா வந்துருக்கே?" என்றாள் தாய்.

நளினிக்குப் புருஷனை ராமனாக வைத்துக் கொள்ளும் ரகசியம் புரிந்தது.

## அடுத்த இதழில்...

# "இப்போது அமைதிப்படை வெளியேறுவதை நான் விரும்பவில்லை..."

— முதல்வர் வரதராஜ பெருமாள் பேட்டி



# ஐடிபிஐ-முதலீட்டுப் பத்திரங்கள் முதலீட்டு ஆதாய வரி விலக்குப் பெற ஒரு கவர்ந்திடும் வழி



- ஆண்டு முழுவதும் சமநிலையில் கிடைக்கும்.
- வருமான வரிச் சட்டம், 1961, பிரிவு எண் 54E-ன் கீழ் முதலீட்டு ஆதாய வரி விலக்கு.
- செல்வ வரிச் சட்டம், 1957, பிரிவு எண் 5(1)xvia)-ன் கீழ் செல்வ வரி விலக்கு.
- வருமான வரிச் சட்டம், பிரிவு எண் 80-Lன் கீழ் வருமான வரி குறைப்பு.
- ஆண்டொன்றுக்கு 9% விகிதத்தில் ஆறு மாதத்திற்கொரு முறை வட்டி வழங்கப்படும்.
- முதலீடு செய்தவர் விரும்பினால் 3 ஆண்டுகட்கான மொத்த வட்டியும் தள்ளுபடி முறையில் முன்னதாகவே ஒரே நேரத்தில் வழங்கப்படும்.
- எவ்வித வரியும் வட்டி வழங்கும்பொழுது கழிக்கப்படமாட்டாது.
- வெளியூர்க் காசோலைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டு, அவற்றை மாற்றுவதற்கான செலவை ஐடிபிஐ ஏற்றுக்கொள்ளும்.

Sobhagya-B/89 TAM



மேற்கொண்டு விவரங்களுக்கு அருகாமையிலுள்ள ஐடிபிஐ ஆபிஸை அணுகுங்கள் அல்லது மானேஜருக்கு எழுதுங்கள்:

**இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆப் இந்தியா**

ஐடிபிஐ டவர், கஃப் பரேட், கொலாபா, பம்பாய்-400 005.

# பத்தா, பதினைந்தா?

"லட்சுமி, உனக்கு ஞாபகம் இருக்கா?"

"எது?"

"குலசேகரன் நம் சந்திராவின் கல்யாணத்துக்கு அன்பளிப்புச் செய்தாரே, அது பத்தா... பதினைந்தா...?"

"பதினைந்து ரூபாயென்று நினைக்கிறேன்..."

"உன் ஞாபகத்தைக் கொண்டு போய் உடைப்பிலே போடு. எனக்குத் தெரியும். பத்து ரூபாய்தான்."

"பின்னே ஏன் என்னைக் கேட்கணும்?" கழுத்தைச் சிலுப்பிக் கொண்டாள், லட்சுமி.

"பொறுப்பாய்ச் சொல்லியேன்னு கேட்டேன். நீ என்னைவிட விளக்கெண்ணெயாய் இருக்கிறாய். ஹூம்... எதுக்கு அந்தப் பொல்லாப்பு? மொய்ப் பண விவரம் எழுதிய நோட்டுப் புத்தகம் கிடைத்தால் எல்லாம் வெட்ட வெளிச்சமாயிடும். அதைத்தான் தேடுகிறேன். கிடைக்க மாட்டேன்கிறது. வைத்த பொருள் எதையும்தான் இந்த வீட்டில் எடுக்க முடியாதே! ஒரே குப்பை... பழைய பேப்பர் கடை மாதிரி..." அலுத்துக் கொண்டார், சோமசுந்தரம்.

இளைய மகன் கண்ணில் பட்டான்.

"டேய் மணிமாறா... நீ பார்த்தாயா?"

"எதை அப்பா?"

"சிங்கத் தலை போட்டு பச்சைக் கலரில் ஒரு நாற்பது பக்க நோட்டு...?"

"அதிலே என்ன எழுதி இருக்கும்?"

"உன் தலை. கேட்டதுக்குப் பதிலைக் காணோம். என்னைக் கேள்வி கேட்க வந்துட்டான்..."

"என்னங்க... மணி ஏழு ஐம்பது..." என்று அறிவிப்புக் கொடுத்தாள், லட்சுமி.

"அடடே... அவ்வளவு நேரமாயிடுச்சா...?" முன்னால் குவிந்து கிடந்த பழைய நோட்டு, பாடப் புத்தகங்களை எல்லாம் அள்ளி, கள்ளிப் பெட்டியில் போட்டுவிட்டுப் பரபரப்புடன் எழுந்தார், சோமசுந்தரம்.

மூன்றாவது வீட்டுக்காரர், குலசேகரன். முந்தா நாள் வந்து, 'பெண்ணுக்குக் கல்யாணம். அவசியம் வாருங்கள்' என்று பத்திரிகை வைத்துவிட்டுப் போனார்.

அந்த நிமிஷத்திலிருந்து சோமசுந்தரத்துக்கு ஒரே குழப்பம்.

**தமிழினியன்**

ஞாயிறு வந்தால் கல்யாணத்துக்குப் போக வேண்டுமே. கல்யாணத்துக்குப் போனால் 'பணம்' வைக்க வேண்டுமே.

'எவ்வளவு வைப்பது?' மண்டையைத் துளைத்தது, இந்தக் கேள்வி.

சென்ற மே மாதம் சோமசுந்தரத்தின் மகளுக்கு மணமாயிற்று. கல்யாணத்துக்கு வந்து 'மொய்' எழுதிவிட்டுப் போனார், குலசேகரன்.

அந்தத் தொகை எவ்வளவு என்று தெரிந்தால் பதிலுக்குப் பதில் செய்யச் சௌகரியமாய் இருக்குமே என்று எண்ணினார், சோமசுந்தரம்.

ஆனால், அந்த நோட்டு...?

"என்ன சோமசுந்தரம், இன்னிக்கு லேட் போலிருக்கே?"

தலையைச் சொறிந்து கொண்டே, ஆபீசுக்குள் நுழைந்தவரை, சக ஊழியர் சாமியப்பன் வினயமாய்க் கேட்டார்.

"ஆமாம், சாமியப்பா. கால் மணி நேரம் லேட் பஞ்ச். இரண்டே முக்கால் ரூபாய் சம்பளத்திலே பிடிச்சுடுவான். எல்லாம் என் தலையெழுத்து. வீட்டிலுள்ள தரித்திரங்களாலே இப்படி ஆயிடுச்சு..." டிபன் பெட்டியை மேசைக்கு அடியில் திணித்துவிட்டு, நாற்காலியில் அசந்து போய் உட்கார்ந்தார் சோமசுந்தரம்.

"ஏன்... வீட்டிலே என்ன பண்ணினாங்க?"

"பண்ணறதுக்கு என்ன இருக்கு. வைத்த சாமான் எதையும் திரும்ப எடுக்க முடியறதில்லை. தேடுவதிலேயே மனுஷனுக்கு ஆயுள் தீர்ந்திடும் போலிருக்கு."

"காலங்கார்த்தாலே அப்படி என்ன முக்கியமான பொருளைத் தேடினீங்க?"

சொன்னார், சோமசுந்தரம்.

'அதற்கா இத்தனை ஆர்ப்பாட்டம்?' என்று என்னவோ சொல்ல வந்தார், சாமியப்பன். ஆனால், சோமசுந்தரத்தின் முகத்தில் கடுப்படித்தது. உடனே, பேச்சை மாற்றினார்.

"சரி... சரி... வீட்டிலுள்ள பொருள் எங்கேயும் போய்விடாது. கொஞ்சம் பொறுமையாய்த் தேடிப் பாருங்கள்."

"உம்... உம்..." என்று உறுமிக் கொண்டே, பணிகளைக் கவனிக்கலானார், சோமசுந்தரம்.

அன்று மாலை.

வீடு திரும்பினார்.

காப்பி குடித்த கையோடு பரண் மீது ஏறினார், சோமசுந்தரம். பழசு, பட்டெல்



லாம் அங்கேதான் கட்டுக் கட்டாக இருந்தது.

''இதுக்காக இந்த வயசிலே பத்தடி உயரப் பரண் மீது ஏறணுமா?'' என்று தடுத்துப் பார்த்தாள், லட்சுமி.

''ஐந்து ரூபாய் மிச்சமாகிறதுன்னா, பத்தடி என்ன, ஐம்பது அடிகூட ஏறுவேன்.''

''சரி... சரி... பேசிக் கொண்டே காலை இசகு பிசகாய் வச்சுடாதீங்கோ. பழைய மூங்கில் சட்டம். உளுத்துப் போய் இருக்கும். பார்த்து... கவனமா...'' அவள் சொல்லி வாய் மூடவில்லை.

'படீர்.'

மூங்கில் சட்டம் முறிந்தது.

சோமசுந்தரத்தின் காலிரண்டும் சட்டங்களுக்குள் சிக்கி வௌவால் மாதிரி தொங்கின. நல்ல வேளை. மனிதன் விழுந்துவிடவில்லை. ஆனால், இரண்டு தொடைகளிலும் பலகை கிழித்து ஆழமான சிராய்ப்பு.

''சொன்னேனே... கேட்டீர்களா...'' தலையில் அறைந்து கொண்டாள், லட்சுமி.

மணிமாறனும், லட்சுமியும் சோமசுந்தரத்தை மெள்ளக் கீழே இறக்கினார்கள்.

ஆட்டோ வைத்து, ஆஸ்பத்திரிக்குச் சென்று, டி.டி. இன்ஜக்ஷன், மருந்து வகையறாக்கள் உட்பட பதின்மூன்று ரூபாய் பில்.

ராத்திரி முழுக்கப் பிதற்றிக் கொண்டே கிடந்தார், சோமசுந்தரம்.

**ம**றுநாள்.

அவரால் அலுவலகத்துக்குப் போக முடியவில்லை. ஆங்காங்கே இருந்த டிரங்க் பெட்டிகளை எல்லாம் மறுபடியும் குடைந்தார். மூன்று அறைகளிலும் இருந்த அலமாரிகளை ஓர் அடுக்குக் கூட விடாமல் அலசினார்.

சற்று அமைதியாய்த் தேடக்கூடாதோ. அவரது பரபரப்பில் ஒரு கிலோ ஹார்லிக்ஸ் பாட்டில் கீழே விழுந்து நொறுங்கியது.

இரண்டு நாளைக்கு முன்னர்தான் வாங்கி இருந்தார் அதை. அத்தனை வைட்டமின் சத்துக்களும் கண்ணாடித் துகள்களில் கலந்து மின்னியது!

அதே நேரம், ''என்ன சத்தம்.....?''

என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார், சுந்தரேசன்.

சோமசுந்தரத்தின் தூரத்து உறவுக்காரர் அவர். இருவருக்கும் ஒத்த பிராயம். நாற்பத்தாறு வயதிருக்கும். ஊரில் சொந்த விவசாயம். திருச்சியில் அவருக்கு நொய் நொய் யென்று ஏதாவது ஒரு வேலை இருந்து கொண்டே இருக்கும். உரம்.... விதை... கலப்பை.... தம்பு என்று சதா வட்டமடித்துக்கொண்டே இருப்பார்.

வந்தால், சிற்சில சந்தர்ப்பங்களில் இப்படி சோமசுந்தரத்தின் வீட்டுப் பக்கம் தலையைக் காட்டுவார்.

''வாங்க சுந்தரேசன், சௌக்கியமா?''

''நல்ல சௌக்கியம். அதுசரி... உள்ளே என்னவோ உடைந்த சத்தம் கேட்டதே. ஏதாவது பாட்டிலா?''

''ஆமாம். ஹார்லிக்ஸ் பாட்டில்.''

''அடப்பாவமே. எப்படி உடைந்தது?'' ஆயாசத்துடன் கேட்டார், வந்தவர்.

''அந்தக் கண்ணறாவியை ஏன் கேட்கிறீங்க. ஒரு வாரமா ஒரு நோட்டுப் புத்தகத்தைத் தேடுறேன். கிடைக்கமாட்டேன் கிறது.''

''ரொம்ப முக்கியமான நோட்டுப் புத்தகமோ?''

''ஆமாம்'' என்ற சோமசுந்தரம் ஆதியோடந்தமாய் விஷயத்தைச் சொன்னார்.

''ப்பூ.... அதுக்காகவா இப்படிக் காலைப் புண்ணாக்கி, பாட்டிலை உடைத்து...''

''அதுமட்டும் இல்லை, அண்ணாச்சி. நேற்று ஆபீசுக்கு லேட்டாய்ப் போய்க் கால் மணி நேரம் சம்பளம் கட்டாயிடுச்சு.'' என்றாள் லட்சுமி.

''அடடே.... ஏன் சோமு இப்படி?''

''என் தலை எழுத்து. அதிருக்கட்டும். நீங்கள் என்ன வேலையாய் வந்தீர்கள்?''

''குலசேகரன் வீட்டுக் கல்யாணத்துக்குத்தான். விடிகாலை ஆறுமணிக்கு முகூர்த்தம். அந்த நேரத்திலே ஊரிலிருந்து வர முடியுமா? அதனால்தான் இப்போதே வந்துட்டேன். ராத்திரி இங்கே தங்கிட்டு விடிந்ததும் சேர்ந்து போகலாம் பாருங்கள்.''

---

● நாளை: ஏகப்பட்ட வேலைகளைச் செய்து முடிக்கப் போவதாய்ச் சோம்பேறிகள் இட்டமிடும் நாள்!

— நார்வே பழமொழி.

தொகுப்பு: எஸ். முகம்மது யூசுப்.

● உங்களைக் கண்டுகொள்ள உங்கள் மூளையை உபயோகியுங்கள். பிறரைக் கண்டுகொள்ள உங்கள் இதயத்தை உபயோகியுங்கள்.

— ஷேக்ஸ்பியர்.

தொகுப்பு: சி. பன்னீர் செல்வன்.

---

மறுமொழி பேசாமல் அவரையே வியப்புடன் பார்த்தார், சோமசுந்தரம்.

''என்ன அப்படி பார்க்கிறீங்க?''

''ஒண்ணுமில்லே.... உங்களுக்கு எப்படி குலசேகரன் பழக்கமானார், அதுவும் பத்திரிகை வைக்கும் அளவுக்கு?''

''அதுவா....'' என்று தாம்பூல வாயால் கொஞ்சம் சிரித்துவிட்டுச் சொன்னார், அவர். ''இரண்டு மாசத்துக்கு முந்தி பையனுடைய காலேஜ் அட்மிஷனுக்காக இரண்டு நாள் வந்து இங்கே தங்கினேன் இல்லையா. அப்போது குலசேகரன் ஒரு தரம் இங்கு வந்துட்டுப் போனாரே... ஞாபகமிருக்கா?''

''ஹூம்... அரைமணி நேரப் பழக்கம் தானே, அது!''

''சினேகம் வரணும்னு இருந்தால் அரைமணி இல்லே... ஐந்து நிமிஷத்திலே கூட உண்டாகும். இல்லேன்னு ஆயிட்டால், மாமாங்கம் பழகினாலும் வராது, சோமு.''

கதவோரம் நின்ற லட்சுமியிடம் ஒரு கண்ணும், காலோரம் கிடந்த செய்தித்தாளில் ஒரு கண்ணுமாக யோசனை வயப்பட்டார், சோமசுந்தரம். பிறகு, குரலைக் கனைத்துக் கொண்டு கேட்டார்.

''புதுப் பழக்கம். உங்கள் வீட்டு விசேஷம் எதுக்கும் வந்திருக்கமாட்டாரே. எவ்வளவு பணம் வைக்கப் போகிறீர்கள்?''

''ஐம்பது ரூபாய் வைக்கலாமென்று இருக்கிறேன்.''

தீச்சுட்டது போல் பதறினார், சோமசுந்தரம். ''என்ன.... ஐம்பது ரூபாயா?''

''ஆமாம். ஏன் இப்படி கேட்கிறீங்க?''

''நீங்கள் எங்கோ அறுபது கிலோ மீட்டர் தொலைவிலே இருக்கிறீங்க. உங்கள் வீட்டிலே ஏதாவது விசேஷம்னா இந்த குலசேகரன் அந்தக் கிராமத்துக்கு வரவா போகிறார்! வீணாய் எதுக்கு அவ்வளவு பணம் செய்யறீங்க?''

சுந்தரேசன் அர்த்தரீதியுடன் புன்னகை செய்தார்.

''அவர் திரும்பிச் செய்யணும் என்ற அவசியம் இல்லை, சோமு. அப்படி எதிர்பார்க்கிறதும் நாகரிகம் ஆகாது. ஏன்னா, இது கடனாய்த்தரும் பணம் இல்லை. ஆசீர்வாதத்துடன் தரும் லக்ஷ்மி. இது பத்தாய், நூறாய்ப் பலமடங்காய்ப் பெருகி மணமக்கள் செல்வச்சிறப்புடன் வாழணும் என்கிறதுதான் இதன் தாத்பரியம். கொடுக்கிறவர்களும் சரி... பெறுகிறவர்களும் சரி, அதைக் குறைவு... அதிகம் என்று கணக்குப் பார்ப்பது தப்பு. அந்தந்தச் சந்தர்ப்பத்தில் நம்மால் முடிந்தது எவ்வளவோ, அவ்வளவு செய்கிறோம்...''

''வெரி குட்... ரொம்ப அழகாகச் சொன்னீர்கள், அண்ணாச்சி. இதை நீங்கள் போன வாரமே வந்து சொல்லி இருந்தால் இன்னும் பொருத்தமாய் இருந்திருக்கும்'' என்று சிரித்தாள், லட்சுமி.

சோமசுந்தரம், தொடைப் புண்ணைத் தடவிக் கொண்டார் — வெட்கத்துடன்.

# பிரமிக்க வைத்த கம்ப்யூட்டர் கண்காட்சி

சுஜாதா

14

சென்ற வாரம் மேற்கு ஜெர்மனியில் உள்ள ம்யுனிக் நகரத்தில், ஸிஸ்டம்ஸ் — 89 என்கிற கம்ப்யூட்டர் மகாநாட்டுக்கும் திறன் காட்சிக்கும் சென்ற வாரம் போயிருந்தேன்; ஐரோப்பிய நாடுகளில் கம்ப்யூட்டர் இயல் எவ்வளவு முன்னேறியிருக்கிறது என்று அறிந்து கொள்ள ஒரு சந்தர்ப்ப ஜன்னல் இது.

ம்யுனிக் நகர மையத்தில் இருக்கும் 'மெஸ்ஸெ ப்ளாட்ஸ்' (Messe platz) என்கிற சதுக்கத்தில் நடைபெற்றது காட்சி (டில்லி ப்ரகதி மைதான் போல இந்தச் சதுக்கம்). இதில் சுமார் 25 ஹால்கள் (ஹால் என்றால் ஒவ்வொன்றும் ஒரு ஃபுட்பால் மைதானத்தை விடப் பெரிய ராட்சச ஹால். சில மூன்று தளம்). இவை முழுவதும் நிரம்பி வழிந்து, வெளியே டெண்ட் போட்டுச் சமாளித்த கம்ப்யூட்டர் சமாச்சாரங்கள். மூச்சு முட்ட வைத்த டெக்னாலஜி.

முதலில் எது எங்கு இருக்கிறது என்று கண்டுபிடிக்கவே முதல் இரவுக் கணவன் போலத் தவித்தேன். ஒருவாறு புரிந்ததும், இருபத்தைந்து ஹால்கள் ஒவ்வொன்றிலும் நூற்றுக்கணக்கான சின்னதும், பெரிதுமான கம்ப்யூட்டர் கம்பெனிகள் கடைபரப்பியிருந்தார்கள். பிரகாசமான வெளிச்சம். ஒவ்வொரு 'ஸ்டாலி'லும் அழகான பெண்களின் நளினமான விரல்களின் கீபோர்டு நடனம். ஒவ்வொரு ஸ்டாலிலும் ஒரு காப்பி ஷாப். பிஸ்கட், சாக்லட், பாதாம் பருப்பு, அப்புறம் கம்ப்யூட்டர் சாதனங்கள். அவைகளை இயக்கும் இளைஞர்கள் பெரும்பாலும் ஜெர்மானியர்கள்.

ஒருபுறம் கோஷ்டி கோஷ்டியாகப் பட்டி மன்றங்கள்; சிறப்பு சொற்பொழிவுகள். கலிபோர்னியாவிலிருந்து வந்திருந்த டாக்டர் டையர் மூளையையும் கம்ப்யூட்டரையும் ஒப்பிடுகையில், 'மூளையின் ஒரு ந்யுரானிலிருந்து, நூறு மில்லியன் இணைப்புக்கள் உண்டு; மொத்தம் மூளைக்குள் ஆயிரம் க்வாட்ரில்லியன் மின் துடிப்புக்கள் இயங்குகின்றன' என்றார். இவர்களெல்லாம் கேட்பார் இன்றி இஷ்டத்துக்குக் கணக்குப் போடுகிறார்கள் என்று எனக்கு ஒரு சம்சயம். இருந்தாலும் மூளைக்கும் கம்ப்யூட்டருக்கும் இணை இல்லைதான்!

இன்றைய தேதிக்கு 486 என்கிற சிலிக்கன் சில்லுக்குள் பன்னிரண்டு லட்சம் இணைப்பு வரைதான் வந்திருக்கிறோம். அந்த 486 பிரதான அங்கம் வகித்த பொருட்காட்சிக்கு மீண்டும் வருவோம். இதில் நான் பார்த்த, அடுத்த நூற்றாண்டைச் சுட்டிக் காட்டும் சங்கதிகளைச் சொல்கிறேன்.

'கிராஃபிக்ஸ்' என்று சொல்லும் இயல் ரொம்ப முன்னேறி வருகிறது. கிராஃபிக்ஸ் என்பது கம்ப்யூட்டர் மூலம் படம் வரைவது, அலசுவது எல்லாம். டெலிவிஷன் போல இல்லை இது. சற்று வித்தியாசப்பட்டது. ஒரு டீ.வி. காமிரா அல்லது ஸ்கானர் என்ற ஒளியால் வருடும் சாதனம். இதை வைத்துக் கொண்டு ஒரு படம் அல்லது வரைபடம், போட்டோ... எது வேண்டுமானாலும், அதை அலசி, ஒளி வர்ண வித்தியாசங்களை பைனரி வடிவத்துக்கு மாற்றி, அதைக் கம்ப்யூட்டரின் ஞாபகச் சில்லுகளில் எழுதி வைத்துக் கொண்டு விடுகிறார்கள். அதன்பின் அட்டகாசம்தான்.

உதாரணமாக OCR என்ற இயல் மூலம் படத்தில் உள்ள அச்செழுத்துக்கள் அனைத்தையும் கம்ப்யூட்டர் அடையாளம் கண்டு கொண்டு a என்றால் aவின் முழு வடிவத்தையும் அல்லாமல் சுருக்கமாக a எழுத்துக்கு உண்டான எண் வடிவமாக மனத்துக்குள் எழுதிக் கொள்கிறது. அதே போல் ஒரு ஒரு நேர்க்கோட்டின் அத்தனை புள்ளிகளின் இடங்களையும் நினைவு வைத்துக் கொள்ள வேண்டியது அனாவசியம். முதல் புள்ளி, கடைசிப் புள்ளி, நேர்க்கோடு என்று மூன்று சங்கேதங்கள் குறியீடுகள் போதும். இவ்வாறு ஒரு படத்தின் சாராம்சங்களைச்



கருக்கிக் கம்ப்யூட்டர் உள்வாங்கிக் கொள்கிறது. இதற்கு (vectorisation) வெக்டரைஸேஷன் என்று பெயர். இவ்வாறு கருக்குவதால் பல பயன்கள் உண்டு. நூற்றுக்கணக்கான வரை படங்கள், சித்திரங்கள் செய்திகளைச் சுருக்கி உள்ளே போட்டுக் கொண்டு, வேண்டும் போது மீண்டும் நீட்டி அச்சடித்துக் கொள்ளலாம். இதற்கேற்ற க்ராஃபிக்ஸ் சாதனங்களான ஸ்கானர், லேஸர் ப்ரிண்டர் லேஸர் டிஸ்க், ஸிடி ராம் (cd rom) என்று பலவற்றை ம்யூனிக் காட்சியில் பார்த்தேன். ஜெராக்ஸ் என்னும் போட்டோ காப்பி இயந்திரம் கூட தற்பொழுது கலரில் வந்து விட்டது.

இரண்டாவதாக நான் முன்பு குறிப்பிட்ட 486 சில்லைப் பயன்படுத்திய பிஸி பர்ஸனல் கம்ப்யூட்டர் வந்து விட்டது. 486 என்பது அதிவேகச் சில்லு. ஒரு சிறிய கம்ப்யூட்டருக்குள் மெயின் ஃப்ரேம் என்று சொல்லக் கூடிய பெரிய திறமையை உள்ளடக்கி விட்டார்கள். அடுத்த நூற்றாண்டு பர்ஸனல் கம்ப்யூட்டர் போய் பர்ஸனல் ஸூப்பர் கம்ப்யூட்டர் வரும்.

இந்த நூற்றாண்டின் இறுதியின் மிக முக்கியமான இயல் டேட்டா கம்யூனிகேஷன் என்பதே. சில வாரங்களுக்கு முன் ஐ.எஸ்.டி.என். பற்றி நான் குறிப்பிட்டது ஞாபகமிருப்பவர்கள் சகல சம்பத்துக்களும் பெற்று மேற்குத் திசையில் இருந்து நல்ல செய்தி பெறுவார்கள். இந்த ஐ.எஸ்.டி.என். என்பது டெலிபோன் கம்பிகள் கேபிள்கள் ஒளி கடத்தும் ஃபைபர் ஆப்டிக் இணைப்புக்கள் மூலம் பேச்சு, கம்ப்யூட்டர் செய்தி இரண்டையும் கலந்தடித்து, அதிவேகத்தில் செலுத்தும் சாதனங்கள் பலவற்றை பார்த்தேன். மேற்கு ஜெர்மானிய 'ஸீமன்ஸ்' Siemens நிறுவனம் இதில் முன் நிற்கிறது.

மற்ற ஐரோப்பிய நாடுகள் அதிகம் பங்கெடுக்கவில்லை. ஃப்ரான்ஸ் பேச்சே இல்லை. அவர்கள் ஜெர்மனிக்கு வர மாட்டார்கள். அமெரிக்கக் கம்பெனிகள் ஒரு ஹால் நிரம்ப இருந்தன. மற்றொரு ஹாலில் பாதிக்கு மேல் கொரியா! மேல் நாடுகள் செய்வது அத்தனையும் அச்சடித்தாற்போல் செய்துவிட்டுச் சிணுங்காமல் பாதி விலைக்கு விற்கும் அசகாய சூரர்கள். அடுத்த நூற்றாண்டில் இவர்கள்தான் முன்னோடப் போகிறார்கள்.

இந்தியா ஒரு பரிதாப மூலையில். மூன்றே மூன்று ஸ்டாலில் காலியாக உட்கார்ந்து கொண்டு வாழ்க்கையை யோசித்துக் கொண்டு வருவல் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

பாரிஸ் ஷார்ல் டிகால் விமான நிலையத்தில் ட்ரான்ஸிட் லவுஞ்சில் உட்கார்ந்து கொண்டு, இதை எழுதும் போது பத்தடி தூரத்தில் இருக்கும் கம்ப்யூட்டர் டெர்மினலில் என் பெயரைக் கேட்டால், 'சுத்த சைவம், ஸீட் நம்பர் 58ஏ' என்று சொல்லும் இந்த கம்ப்யூட்டர் செய்தித் திறமை, டேட்டா கம்யூனிக்கேஷன், இதுதான் இந்த நூற்றாண்டின் முத்தாய்ப்பு. ம்யூனிக் நகரின் சின்ன ஓட்டலிலிருந்து, பதின்மூன்று எண்களை டெலிபோனில் ஒத்தினால் பெங்களூரில் என் வீட்டில் ஒலிக்கிறதே, அதுதான் இந்த நூற்றாண்டின் நிறைவுரை.

**மோடெம் என்றால் என்ன?**

**கல்கி 15.10.89 இதழில் சுஜாதா எழுப்பிய மேற்படி கேள்விக்குச் சரியான பதில்களை அனுப்பியவர்கள் 181 பேர். இவர்களில் குலுக்கல் முறையில் சுஜாதாவின் 'ஊஞ்சல்' என்னும் நாடக நூலைப் பரிசாகப் பெறுபவர்:**

**க. சுவாமிநாதன்,**
**14-A, காரியபெருமாள் கோயில் தெரு,**
**சிதம்பரம் — 608 001.**




இந்த வாரக் க்விஸ்: படத்தில் உள்ள பழங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு தனிப்பட்ட எண் மதிப்பு உண்டு. ஒரு பழத்தின் மதிப்பு மற்றதுக்கு இல்லை. மதிப்புக்களை மேலிருந்து கீழ் இடம் வலமாகக் கூட்டினால் வரும் எண்ணிக்கையை எழுதியுள்ளோம். நீங்கள் நிரப்ப வேண்டியது விட்டுப் போன ஒரே ஒரு கூட்டுத் தொகை மட்டும்தான்.

இதை உங்களால் கண்டுபிடிக்க முடிந்தால் நீங்கள் மென்ஸா என்கிற அதிபுத்திசாலிகளின் கோஷ்டியில் சேரத் தகுந்தவர்கள்.

ஒரே ஒரு நிபந்தனை;
ஒரு நிமிஷத்தில் கண்டுபிடிக்க வேண்டும்.

(தொடரும்)

# ஒரு மாணவருக்கு எட்டு அதிகாரிகள்!



மேட்டுப்பாளையத்தில் உள்ள ஒரு மேல்நிலைப் பள்ளியில் 1989 அக்டோபரில் நடைபெற்ற +2விற்கான அரசு பொதுத் தேர்வில், புவியியல் தேர்வு எழுத மூன்று பேர் அனுமதி வாங்கியும், அதில் இரண்டு பேர் கலந்து கொள்ளவில்லை. ஒரே ஒரு மாணவர் மட்டும் கலந்து கொண்டு தேர்வு எழுதினார். இவரைக் கண்காணிக்க எட்டு அதிகாரிகள் தேர்வு மையத்தில் பணிபுரிந்திருக்கிறார்கள்.

தகவல்: மு. தேன்மொழி கலியாண சுந்தரம்.



''தேர்தல் பிரசாரத்துக்கே போகாம இருக்கிங்களே... எப்படி ஜெயிப்பீங்க?''

''எப்படியும் ஓட்டு ''வ ா ங் கி ட லாம்''ங்கிற தைரியம்தான்...''

— எஸ். கீபைகதின்.

''உன்னை, சினிமாவுக்கு வர்றியான்னு கேட்ட அவன், திரும்பிப் பார்க்காமல் ஓடற அளவுக்கு என்னடி சொன்னே?''

''கராத்தே கிளாஸ் இருக்கு... அதை முடிச்சிட்டு வர்றேன்னு சொன்னேன்...''

— சீர்காழி ஸ்ரீராம்.



''அப்பா! வெளியிலே யாரோ வந்திருக்காங்க. வோட்டுப் போடணுமாம்...''

(ஏதோ நினைவாக) ''காலையிலே விருந்து எத்தனை பேருக்குப் போட்டாறது... பக்கத்து வீடு பார்க்கச் சொல்லு...''

— எஸ். கீபைகதின்.



''நான் எம்.பி. ஆவதற்கு முன்பு, தொகுதியில் பத்து வேன்கள்தான் ஓடிக்கொண்டிருந்தன. அவை இன்றைக்கு நாற்பது பஸ்களாக ஓடுகின்றன. இந்த வளர்ச்சியைப் பாராட்டாமல், 'எம்.பி.க்கு நாற்பது பஸ்கள் இருக்கின்றன' என்று எதிர்க் கட்சிக்காரர்கள் வயிற்றெரிச்சல் பட்டால் எப்படி...?''

— சன்பை. சிவ. சண்முகம்.



## நீங்கள் கேட்டவை — தராசு



* ஜட்கா வேகம்!



* மைக் கறை!

* ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.

? எம்.ஜி.ஆர். நினைவுத் தபால்தலை வெளியிடப் போவது பற்றி...?

! நாமக்கல் கவிஞர் தபால் தலையில், ஹிந்தியில் அவர் பெயரைக் குதறியது மாதிரி இதிலாவது செய்யாமல் இருந்தால் சரி!

* வெள்ளகால் இரா. கந்தையா, ஆலடியூர்.

? டாக்டர் ராதாகிருஷ்ணன் வாழ்க்கை வரலாற்றை எழுதியுள்ள அவர் மகன் டாக்டர் கோபால் தம் தந்தை பற்றிய சில கிசுகிசுக்களை எழுதியுள்ளாராமே?

! கிசுகிசுக்கள் அல்ல அவை. பகிரங்கமாக எடுத்துச் சொல்லியிருக்கும் விஷயங்கள். 'உண்மையை உள்ளபடியே எழுதிய துணிச்சலான சரித்திரம்' என்று விமர்சகர்கள் பலர் பாராட்டியுள்ளனர். இப்படிச் சில புள்ளிகளாக மைக் கறைகள் பட்டிருப்பதால் டாக்டர் ராதாகிருஷ்ணன் என்ற மகத்தான தத்துவ ஞான நூலின் மதிப்பு குறைந்து போய் விடாது!

* கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? 'இரண்டாவது மாசத்தில் கலைக்க முடியாததை, ஒன்பதாவது மாசத்திலா கலைக்க முடியும்?' என்று பொன்முடி கேட்கிறாரே...?

! டாக்டர் அல்லவா! அதனால் மருத்துவ ரீதியில் போகிறார். ஆனால், 'கம்சத்தனம் என்பது இன்றைக்கும் உண்டு என்பதை மறவாமல், தேசிய முன்னணி வெற்றி பெற வழியைப் பாருங்கள்' என்பதே அவருக்கு நாம் சொல்லிக் கொள்வது!



* தபால் தலைக் குறை நல்!



* புனிதவல்லி இளங்கோ, கடலூர்.

? 'ஜெகஜ்ஜாலக் கில்லாடி' பட்டம் யாருக்குப் பொருந்தும்?

! 'ரோலிங் கப்' வழங்குவதானால் இப்போதைக்கு அது வின்சத்தாவிடம் இருக்கும்!

* அ. முஸ்தபா, தக்கோலம்.

? ஷார்ஜாவில் எந்த அணியின் ஆட்டம் ரசிகர்களுக்கு விருந்து படைத்தது?

! அக்ரமின் பந்து வீச்சு; சலீம் மாலிக், மியாந்தாத் பாட்டிங்; தவிர, பதினோரு பேரும் முழுத் திறமை காட்டி ஒத்துழைத்த பாகிஸ்தான் டீமுக்குப் பிறகுதான் மற்ற அணிகளை வரிசைப்படுத்த முடியும்!

* எம். குணசேகரன், வேலாயுதம்பாளையம்.

? பிரதமரின் செயலர் மணி சங்கர அய்யர் அரசியலில் குதிக்கப் போகிறாராமே?

! ஆமாம்; சஃபாரி சூட்டைக் கழற்றி விட்டு பைஜாமா—குர்த்தா அணிந்து விட்டார்! தென் சென்னை தொகுதி கிடைத்தால் வேஷ்டி—சட்டை அணிய ஆரம்பித்து விடுவார்!

* ஜி. குசேலன், சங்கராபுரம்.

? பந்தைய குதிரை வேகத்தில் தெலுங்கு கங்கை பணி நடப்பதாகத் துரை முருகன் கூறியுள்ளாரே?

! சிறிய ஊர்களில் ஜட்கா வண்டி பயணம் செய்திருக்கிறீர்களா? "என்னப்பா, வண்டி இவ்வளவு மெதுவா போவுது?" என்று கேட்டால், வண்டிக்காரர் சாட்டையைச் சொடுக்கி, "ஹய்! ஹய்!" என்று விரட்டுவார். கூடவே, "இது பந்தயத்தில் ஓடிய குதிரைங்க! எத்தனை தடவை ஜெயிச்சிருக்குத் தெரியுமா?" என்றும் கேட்பார். எங்கள் வீட்டுக் குழாயில் தண்ணீர் வரட்டும்; அப்புறம் நம்பலாம் துரைமுருகனை!

* வி. வேங்கடராமன், சீர்காழி.

? ஸ்ரீகாந்த் கேப்டன் ஆனது பற்றி...?

! ஹூம்... எத்தனையோ எதிர்பார்ப்புடன்தான் வாழ்த்துத் தெரிவித்தோம்... என்ன பண்றது... 'எங்க ஊர் ஸ்ரீகாந்தும் காப்டன் ஆனார்'னு சொல்லிக்கலாம்... ...அது சரி, பார்ட்டி என்ன ஆயிற்று மிஸ்டர் வி.எம்.? ஜெயித்தால்தான் பார்ட்டியா?

* பாசு, திருப்பூர்.

? நாடாளுமன்றத் தேர்தலைக் குறிப்பிட்ட காலத்துக்கு முன்னரே அறிவித்தது ராஜீவின் தைரியத்தைத்தானே காட்டுகிறது?

! அல்ல; தந்திரத்தை! ராஜீவ் நடத்த இருந்தது மார்ச்சில்தானாம். ஆனால் ஜனாதிபதி ஒத்திப் போட அனுமதி வழங்கவில்லையாம்.

* மருத்துவ ரீதியில்...

# 'ஜெகஜ்ஜாலக் கில்லாடி' பட்டம் யாருக்குப் பொருந்தும்...?



* ஜகஜ்ஜாலர்!



* ஜெயித்தால்தான் பார்ட்டியா?



* அரசியலில் குதிக்கிறார்!

அதுவும் நல்லதாயிற்று ராஜீவுக்கு! இவருக்கு எதிராக வழக்குப் போட அனுமதி கோரி ஜனாதிபதியிடம் பல கோரிக்கைகள் வர ஆரம்பித்து விட்டன. நிலைமை ஒரு மாதிரி ஆகி விட்டது. வழக்கைச் சந்திப்பதை விடத் தேர்தலைச் சந்திப்பது மேல் அல்லவா? அதுவும், எதிர்க்கட்சிகள் தொகுதி உடன்பாட்டுக்கு வந்து தயார் நிலையில் இல்லாத போது, தேர்தலை முன்னதாகவே நடத்துவதில் ஆதாயம் இருக்கிறதே!

* அ. இராஜப்பன், பொகலூர்.

? அறிவாளி எந்த சமயத்தில் வெறுக்கப் படுகிறான்?

! அவன் கூறும் அறிவுரை நமக்கு ஒத்து வராத போது, 'அவன் கிடக்கிறான் விடு' ...அவன் கூறும் அறிவுரை நமக்கு ஏற்றதாய் இருக்கும் போது, 'ஆகா அவனைப் போல் உண்டா!'

* நெல்லை அருணா, பழஞூர்.

? 'ஷைனி அபிரகாம் வெளிநாட்டில் நடக்கும் போட்டியில் பங்குபெற தனது சொந்தச் செலவில்தான் போக வேண்டும்' என்று மத்திய அரசின் விளையாட்டுத் துறை கூறியிருப்பது சரியா?

! விளையாட்டுத்தனமாகக் கூட இப்படி அபத்தமாகப் பேசியிருக்கக் கூடாது. விளையாட்டுத் துறை அதிகாரிகள் சொந்தச் செலவில் அயல்நாடுகளுக்குப் போகட்டுமே? செய்வார்களா? 'நூலகக் கட்டடங்களுக்கும், ஊழியர்கள் சம்பளத்துக்குமே பணம் சரியாகி விடுகிறது; புத்தகம் வாங்கப் பணமில்லை' என்று தமிழக அரசு சொல்வது போல்தான் இதுவும்!

* எஸ். நாகராஜன், கீழையூர்.

? அரிசிக்கும் ஜீனிக்கும் மத்திய அரசைக் குறை கூறி கலைஞர் போராட்டம் செய்கிறாரே! மின்சாரம், பஸ் கட்டணம், பல சரக்கு இவற்றுக்கு ஏன் பதில் கூறவில்லை?

! அரிசியும் ஜீனியும் மத்திய அரசின் கட்டுப்பாட்டில் இருப்பதாலும் தமிழகக் கோட்டாவை அவர்கள் குறைத்திருப்பதாலும் குறை சொல்கிறார். தமிழக அரசின் மின்வாரியமும், பல்லவனும் நஷ்டத்தில் இயங்குகின்றன. அதனால் கட்டணம் உயர்த்த நேர்ந்தது. பொது மக்கள் கருத்து அறிந்து, உயர்த்தப்பட்ட பஸ் கட்டணம் கணிசமாகக் குறைக்கப்பட்டது. மின்சாரத்தைப் பொருத்தமட்டில் விவசாயிகளுக்குப் புதிய சலுகைகள் வழங்கப்பட்டுள்ளன. பொதுவாக நோக்குமிடத்து, விலைவாசிகள் உயர்வுக்கு அடிப்படைக் காரணம் நாட்டின் பொருளாதாரம் சரியானபடி நிர்வகிக்கப்படாததே. அந்த நிர்வாகம் முழுக்க முழுக்க மத்திய அரசின் கையிலேயே இருக்கிறது.

* ஏ. சிவமுருகேசன், சின்னமனூர்.

? இலவச புடைவை — வேஷ்டி திட்டத்தை ஜெயலலிதா குறை கூறுகிறாரே?

! 'தேர்தலுக்கு முன் இப்படி செய்வது தேர்தல் கமிஷன் அறிவித்துள்ள நன்னடத்தை விதிமுறைகளை மீறியதாகும்' என்கிறார். ஆனால் கருணாநிதியோ, 'இது தேர்தல் நோக்கில் செய்யப்படுவதல்ல; தேர்தல் அறிவிப்பு வெளியிடு முன்னரே சட்டமன்றத்தில் ஒப்புதல் பெறப்பட்ட பணி' என்கிறார். சட்டப்படி கலைஞரின் வாதம் சரியாக இருக்கலாம். ஆனால் தார்மீக ரீதியில் இந்த இலவச விநியோகத்தைத் தேர்தலை முன்னிட்டுத் தாற்காலிகமாக நிறுத்தி வைப்பதே முறையானதாயிருந்திருக்கும்... ஆனால் ஒன்று. சேவல் முத்திரையிட்ட சேலைகளைத் தமது தொகுதியில் சட்டசபைத் தேர்தலுக்கு முன் விநியோகித்த ஜெயலலிதாவுக்குக் கலைஞர் மீது இவ்வாறு குற்றம் சாட்ட உரிமையில்லை.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:
பாசு,
202, தென்னம்பாளையம்,
திருப்பூர் — 638 604.




## வட்டமேஜை

# "கல் மனத்தையும் கரையச் செய்யும்!"

• 'பிரதமரின் கௌரவம் பாதாளத்தில்' தலையங்கம், இப்போது உள்ள நிலைமையை வெளிச்சம் போட்டுக் காட்டுவது. ராஜீவ் பிரதமரான புதிதில், படித்தவர்கள் முதல் படிக்காத, பாமர ஜனங்கள் வரை, 'நியாயமான ஆட்சி வழங்குவார்' என அபரிமிதமான நம்பிக்கை வைத்திருந்தார்கள். அந்த நம்பிக்கையை நொறுங்கச் செய்து, 'இவர் எப்போது பதவி விலகுவார்?' என நினைக்க வைத்து விட்டாரே!

சென்னை — 45. ஜப்பார் காதர்.

• 'என். டி. ஆரின் அபூர்வ சகோதரர்' 'வஜ்ரம்' போல் சிலர் இருப்பதால்தான் இன்னும் நாட்டில் ஓரளவுக்காவது மழை பெய்கிறதோ?' என்று எண்ணத் தோன்றுகிறது. பணம் முக்கியமல்ல; நல்ல மனம்தான் முக்கியம் என்று எத்தனை பேர் எண்ணுகிறார்கள்? வஜ்ரத்துக்கு எங்கள் வாழ்த்துக்கள்.

சென்னை — 91. ஜி. ஸ்ரீனிவாசன்.

• 'ஞானம் மாமி' சிறுகதை அற்புதம். "வயசானவர்ளா மூட்டை முடிச்சில்லேப்பா, அங்கே கொஞ்ச நாள் இங்கே கொஞ்ச நாள்னு உருட்டி விட..." என்ற வரிகள் கல் மனத்தையும் கரையச் செய்யும்.

நக்கோலம். ஆ. புகாரி.

• 'ஒரு தவறு — ஒரு தொடர்பு — ஒரு நிறைவு உண்மைக் கதை: ஒரு வியப்பு — ஒரு நெகிழ்வு — ஒரு மகிழ்வு!

சென்னை — 15. கு. கணேசன்.

• "பிரபுவுக்குக் கண்தான் குருடே தவிர, கருத்துக் குருடல்ல" என்பதை உணர்ந்த ஜெயலட்சுமி, பிரபுவையே கணவராகத் தேர்ந்தெடுத்து மனமகிழ்வுடன் வாழ்வதை எண்ணிக் கல்கி வாசகர்களின் சார்பாக எனது மனமார்ந்த பாராட்டுதல்களையும், வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

வால்குடி. எம். ராஜேந்திரன்.

• இரு மனித மனங்கள் இணைந்து வாழ்வைத் துவக்க, வயது என்பது எப்பொழுதும் தடைக் கல்லாக இராது என்பதைத் தெள்ளத் தெளிவாக வெளிப்படுத்தியது கிருஷ்ணாவின் "நாற்பது வயதில்" என்ற சிறுகதை.

குடியாத்தம். ஏ. உமாசங்கர்.

• "ராஜாஜி வாழ்க்கை வரலாறு ஏழாம் பகுதி"யின் தமிழாக்கத்தைத் தெளிந்த நீரோடை போலத் தெளிவான நடையுடன் தந்த கல்கி ஆசிரியருக்கு மனமார்ந்த பாராட்டுக்கள். எட்டாம் பகுதிக்கு ஆவலுடன் காத்திருக்கிறோம்.

புதுவை — 3. புதுச்சேரி நாடி.

• எங்களின் சார்பாக, எங்கள் மனத்தில் உள்ளதைத் தாங்களே பாரதி ராஜாவுக்குத் தெரிவித்தமைக்குப் பாராட்டுக்கள்! இத்தொடர் கதைக்கு மேலும் மெருகூட்டும்படி ஓவியம் வரைந்த 'ம.செ.' அவர்களுக்கும் பாராட்டுக்கள்!

சீர்காழி. ஜெயப்ரியா.

• வாரப் பத்திரிகையில் தொடர் நாவலாக வந்து, பின்னர் சினிமாக் காவியமாக உருவாகி, வியத்தகு சாதனை புரிந்த "தில்லானா மோகனாம்பாள்" பற்றிப் பாரதி ராஜாவுக்குத் தெரியுமா? இதெல்லாம் உங்களுக்கொரு படிப்பினைதான்!

அருப்புக்கோட்டை. ஐ. இராமச்சந்திரன்.

• 'என் உயிர்த் தோழன்' படித்ததிலிருந்து, தென்னவனோடு கை குலுக்க வேண்டும் போலவும், தருமனின் தோளில் கை போட்டுப் பேச வேண்டும் போலவும், சிட்டுவிடம், 'சௌக்கியமா இருக்கியா தங்கச்சி?' என்று கேட்க வேண்டும் போலவும் என்னுள் ஒரே ஆவலாய் உள்ளது.

கடலூர் — 2. ஆர். வேலுமணி.

• எப்போதும் தொடர் கதை முடிவில் கதையைப் பற்றிய வாசகர் கருத்துக்கள்தான் இடம் பெறும். என் உயிர்த் தோழனைப் பொறுத்தவரை, கதாசிரியரையே இதழ் ஆசிரியர் விமர்சிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது துர்பாக்கியமே!

திருவாரூர். அ. சம்பத்.

• ராம ஜன்ம பூமி — பாபர் மஸ்ஜீத் பற்றிய கேள்விக்குத் 'தாரா'வின் பதிலைப் படித்து மகிழ்ச்சியடைந்தேன். 'உண்மையான இந்து'வை விட, உயர்ந்த இந்தியன், உன்னதமான மனிதப் பண்பு ஆகியவற்றின் முக்கியத்துவத்தை வலியுறுத்தும் பதிலுக்கு எனது பாராட்டுக்கள்.

தூத்துக்குடி. ச. சங்கரன்.

• மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சரின் நேர்முக உதவியாளர் 22.10.89 கல்கி இதழில் வட்ட மேஜை பகுதியில் எழுதியுள்ள கடிதம் பார்த்தேன். குறிப்பிட்ட கேள்வியைத் தாராவின் பதிலுக்காக எழுதியனுப்பியவன் நான். 22.9.89 ஜூனியர் போஸ்ட் வார இதழில் இடம் பெற்ற செய்தியே என் கேள்விக்கு அடிப்படை. அந்தப் பத்திரிகையில் அமைச்சர் கூறியதாக வெளிவந்துள்ள வாக்கியத்தையே வார்த்தை பிசகாமல் எடுத்தாண்டு இருக்கிறேன்.

குருசாமிபாளையம். கு. நாகராஜன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

# இப்போது, விம்
# ஏறக்குறைய பாதிவிலையிலே...




## பேரச் சலுகை
## அளிக்கும் (கேரிபேக்) தூக்குப் பை.

இப்போது ஏறக்குறைய பாதி விலையில் கிடைக்கிறது நீங்கள் விரும்பும் விம்... பணமிச்சம் தரும் (கேரி பேக்) தூக்குப் பைகளிலே!

ஒப்பிட்டுப் பாருங்களேன்

| | |
|---|---|
| பேக் | 100 கிராம் விலை |
| 500 கிராம் கேனிஸ்டர் | 135 பைசா |
| 2.5 கிலோ கேரிபேக் பை | 75 பைசா |




விரைந்தோடி இன்றே வாங்குவீர் புதிய விம் கேரிபேக் உங்கள் தேவைக்குகந்த அளவிலே (தேர்ந்தெடுக்க கிடைப்பவை 500 கிராம், 1 கிலோ, அல்லது 2.5 கிலோ பேக்குகள்)

**ஒரு துளி விம் தரும் துலக்கம் அதிகப் பாத்திரங்கள் ஒளிமினுக்கும்**

LINTAS VG 482 2213 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka